# திருக்கோயில்



ஏப்ரல் & மே 1997
விலை ரூ. 6-00





சென்னை அருள்மிகு சென்னகேசவப்பெருமாள் ஆலயத் திருக்குடநீர் தெளிப்பு விழா 16-6-97 அன்று மிகச் சிறப்பாக நடை பெற்றது. இவ்விழாவில் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாட்டுத் துறை மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் தமிழ்க்குடி மகன் அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு கே.தர்மராஜன் இ.ஆ.ப.,. அறநிலையத் துறை ஆணையாளர் திருமிகு ச. மெய்கண்டதேவன் இ.ஆ.ப., ஆலயப் பரம்பரை அறங்காவலர் திருமிகு மணலி இராம கிருட்டிணன் ஆகியோர் முன்னிலையில் இவ்விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது.

முகப்பு :
திருப்போரூர் அருள்மிகு கந்தசாமி

# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, உத்தமர் காந்தி நெடுஞ்சாலை,
சென்னை—600 034,
தொலைபேசி எண்: 8279407

ஆசிரியர் :
கவிஞர் முனைவர் த. அமிர்தலிங்கம், M.A.,Ph.D.

| மாலை : 39 | திருவள்ளுவர் ஆண்டு 2028 ஈஸ்வர ஆண்டு சித்திரை & வைகாசி<br>ஏப்ரல் & மே 1997 விலை ரு. 6—00 | மணி : 4 & 5 |
|---|---|---|

## திருக்கோயில் வாசகர்களுக்கு அறிவிப்பு

அன்பு வாசகர்களே ! வணக்கம்,

திருக்கோயில் திங்கள் இதழின் உறுப்பினர் களாகச் சேர விருப்பம் உள்ளவர்கள்.

உயர்திரு **ஆணையர்** அவர்கள்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
சென்னை-600 034.

என்ற முகவரிக்கு பணவிடை அல்லது வங்கி வரைவோலை மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

### சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| அரை ஆண்டு | .. ரூ. | 18-00 |
| ஓர் ஆண்டு | .. ரூ. | 36-00 |
| ஆயுள் | .. ரூ. | 300-00 |

சந்தாதாரர்கள் முழுமுகவரியைத் தெரிவிக்க வேண்டும்,

முகவரியில் மாற்றம் இருப்பின் உடனுக்குடன் தெரிவித்திடவும் வேண்டும்.

## பொருளடக்கம்



# அற்றார் அழிபசி தீர்ப்பது கடமை!

**மாண்புமிகு தமிழக முதல்வர்**
**முத்தமிழ் அறிஞர்**

## டாக்டர் கலைஞர்

**அவர்கள்**

நெருங்கிய உறவினர் ஒருவருடைய மகளுக்குத் திருமணம் நிகழவிருந்தது. ஊரோ நெடுந்தொலைவு. அதற்காக அங்கே போகாமலும் இருக்க முடியாது.

எனவே மனைவி மக்களுடன் மணவிழாவில் கலந்து கொள்ளக் கிளம்பினான் அவன். இடையிலே குறுக்கிட்டது இரவு. அதனால் பாதிப் பயணத்திலேயே ஓர் ஊரில் படுத்துவிட்டுத்தான் போக வேண்டும் என்கிற நிலை.

இங்கே பயணிகள் தங்கிச் செல்லக்கூடிய பழங்காலச் சத்திரம் ஒன்று இருந்தது. அதிலே குடும்பத்துடன் அவன் படுத்துறங்கினான். நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கினான். பயணக் களைப்பு; அதனால் ஆழ்ந்த உறக்கம். விடிந்து வெகுநேரம் கழித்தே அவனுடைய குடும்பம் விழித்தது.

முதலில் கண்ணைத் திறந்த அவன் மனைவி 'என்னங்க இது? மூட்டை முடிச்சுகளையெல்லாம் காணோம்?'' என்று பதறிப் போய் குரல் கொடுத்தாள்.

''அய்யோ என் காசுப்பையையும் காணோமே! என்று அவனும் அலறினான்.

கட்டுச்சோற்று மூட்டை காசுப்பை எல்லாமே களவு போய்விட்டது. அந்தக் குடும்பமே கதறித் துடிக்காமல் என்ன செய்யும்? உதவிக்கு வரக்கூடியவர்களும் அங்கே ஒருவரும் இருப்பதாகத் தெரியவில்லை.

இனி எப்படிப் பயணத்தைத் தொடர்வது பசியை ஆற்றிக் கொள்வது என்பதே விடை காணமுடியாத சிக்கலாகிவிட்டது. வேதனை வெள்ளம் அவர்களை விழுங்கித் திணற செய்தது.

குழந்தைகளோ 'பசிக்குதே! பசிக்குதே!' என்று கூட்டுக்குரல் எழுப்பிச் சோற்றுக்கு வழி செய்யுமாறு கெஞ்சினர்.

இப்படியொரு புயல் வீசும் என்று குடும்பத் தலைவன் எதிர்பார்க்கவே இல்லை. அச்சமயம் கயல் வீச்சுக் கண்ணழகி ஒருத்தி கையிலே பழத்தட்டை ஏந்தி விலை கூறி வந்தாள் அந்தப் பக்கம்.

அந்தக் குடும்பத்தினரைப் பார்த்ததும், 'அம்மா நீங்களா? எங்கே இவ்வளவு தூரம் வந்தீர்கள்? எதற்காகக் குழந்தைகள் அழுகிறார்கள்?'' என்று வியப்பு மேலிட வினவினாள்.

**மாண்புமிகு தமிழக முதல்வர் முத்தமிழ் அறிஞர் டாக்டர் கலைஞர் அவர்களின் " குறளோவியம் " காவியத்திலிருந்து இக் கருத்தோவியம் நன்றியுடன் எடுத்து வெளியிடப்படுகிறது.**

குடும்பத் தலைவி தங்களுக்கு ஏற்பட்ட கொடிய சோதனை பற்றி எடுத்துக் கூறினாள். அதனைக் கேட்டதும் பாகாக உருகிப்போனாள் பழத்தட்டுக்காரி. தன் தட்டிலிருந்த பழங்களையெல்லாம் குழந்தைகளுக்கு வழங்கினாள். அத்துடன் அவள் விடவில்லை ''நீங்கள் ஒன்றும் தப்பாக நினைக்காமல் என் வீடு வரை வரவேண்டும். பானையிலே இருக்கின்ற கஞ்சியைப் பகிர்ந்து குடித்துவிட்டு நீங்கள் பயணத்தைத் தொடரலாம். என்னிடம் கொஞ்சம் காசு இருக்கிறது. அதையும் நீங்கள் வழிச் செலவுக்கு வாங்கிச் செல்லலாம்.'

அவளுடைய அன்பான சொற்களைக் குடும்பத் தலைவனால் நம்பவே முடியவில்லை. அவனுடைய திகைப்பைத் தெளிவிப்பவளாக அவள் மேலும் இப்படித் தொடர்ந்தாள்.

''இவள் எதற்காக நமக்கு உதவி செய்ய ஓடிவர வேண்டும் என நினைக்கிறீர்களா? ஆனால் என்னை யாரென்று அறியாமலே உங்கள் மனைவி செய்த உதவிக்கு இது தினையளவுகூட ஈடாகாது. உங்களைப் போலத்தான் எனக்கும் ஒரு நிலைமை ஏற்பட்டது. ஒருமுறை தீயவர்களிடமிருந்து தப்பியவளாக உங்கள் ஊரிலே வந்து அடைக்கலம் புகுந்தேன். அப்போது பட்டினியால்நான்படாதபாடுபட்டேன். தெருத்தெருவாக அலைந்தும் ஒரு கவளம் சோற்றுக்கும் வழியில்லாது துவண்டுவிட்ட நிலையில் இந்த அம்மாதான் என்பசியை ஆற்றினார்கள். உயிருள்ளவரை அந்த நன்றியை நான் மறக்கலாமா?''

விழிகள் நீரில் மிதக்கப் பழத்தட்டுக்காரி இவ்வாறு கூறிவிட்டு அவர்களைப் பிடிவாதமாகத் தன் இல்லத்துக்கு இட்டுச் சென்றாள். சாலையில் செல்லும்போது தன் கோலமயிலிடம் அவன் கூறினான்.

''வள்ளுவர் வாக்கு அப்படியே பலிக்கிறது பார்த்தாயா! பட்டினி என்று சொல்லி வந்தவர்களின் பசியை ஆற்றுவது என்றுமே வீண் போகாது. அதுவே தான் பெற்ற ஒரு பொருளைப் பிற்காலத்தில் உதவுவதற்கு ஏற்பச் சேமித்து வைக்கக் கூடிய கருவூலம் ஆகும் என்கிறார் அவர். ஈகைப் பண்புக்குள்ள வியக்கத்தக்க சிறப்பைப் பார்த்தாயா!''

''அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி''.

---

# தமிழில் அருச்சனை

மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர்

**முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள்**

மாண்புமிகு தமிழக அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் அண்மையில் பசும்பொன் மாவட்டத்திற்கு வருகை தந்த பொழுது தெரிவித்த சில முக்கிய கருத்துக்களின் விவரம் பின்வருமாறு:

எல்லா மாவட்டத்திலும் உள்ள அறநிலையத் துறை அலுவலர்களின் பணிகள் சீரமைக்கப்படும். அத்துடன் அந்தந்த மாவட்டங்களில் காலியாக உள்ள பணிஇடங்கள் நிரப்பப்படும்.

வருவாய் இல்லாத சிறிய திருக்கோயில்களுக்குப் பெரிய திருக்கோயில்களின் வருமானத்தில் இருந்து ஒருகாலப் பூசைக்குச் செலவிடப்படும் திட்டம் தொடர்ந்து நடைமுறையில் இருந்துவரும்.

மேலும் திருக்கோயில்களில் தமிழில் அருச்சனை வேண்டும் என்று கேட்பவர்களுக்குத் தமிழில் அருச்சனை செய்யப்படும்.

திருக்கோயில் நகைகளைச் சரி பார்க்கும் வகையில் திடீர் சோதனைகள் மேற்கொள்ளப்படும்.

அத்துடன் ஒவ்வொரு திருக்கோயில்அலுவலரின் மாதப்பணிகளின் ஆய்வும்நடத்தப்படும். சரியாகச் செயல்படாத அலுவலர்களுக்குக் குறிப்புகள் அனுப்பப்படும். தொடர்ந்து அதே போல் இருந்தால் நடவடிக்கை எடுக்கப்படும்.

சிவகங்கையில் உள்ள இராசராசேசுவரி திருமண மண்டபத்தில் அரசின் அருங்காட்சியகம் அமைக்கப்படும்.

---

# தென்பாண்டி நாட்டு பஞ்சபூத ஸ்தலங்கள்

பேராசிரியர் பைம்பொழில் கே. பாலசுப்பிரமணியன்

**முன்னுரை**

'வாக்கு மனாதீதமாய் நின்ற பரம்பொருளாகிய சிவபெருமான் உலகத்தார் தம்மை அறியுமாறு கருணை செய்து அருட்திருமேனியுடன் எழுந்தருள்கிறான். ஆன்மாக்களுக்கு புத்தி முத்தி நல்கும் பொருட்டும் பிருதிவி அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் எட்டினையும் திருமேனியாக்கிக் கொள்கிறார் சிவபெருமான். ஆன்மா ஆகி எட்டனுள்ளே ஓர் திருமேனி கொண்ட சிவபெருமான் பசுபதி எனவும் ஆன்மா பசு எனவும் கொள்ளப்படுவர்' என்று சிவஞான போத வசனாலங்கர தீபம் கூறுகிறது. நெருப்பு நீர்நிலம் காற்று ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களின் வடிவாக முறையே காஞ்சிபுரம் அல்லது (திருவாரூர்) திருவானைக்காவல் திருவண்ணாமலை திருக்காளத்தி சிதம்பரம் ஆகிய ஸ்தலங்களில் எம்பெருமான் அருள் பாலித்து நிற்கிறார். இந்த பஞ்சபூத ஸ்தலங்களையும் ஒரே நாள் ஒரே இரவில் நம்மால் தரிசிக்க முடியுமா?

ஒரே நாள் இரவில் (சிவன்ராத்திரி) அன்று தரிசித்துப் பயன் பெறும் வகையில் தென்பாண்டி நன்னாட்டில் பஞ்சபூத ஸ்தலங்கள் அமைந்துள்ளன அத்தலங்கள் சுற்றிய சிறு கட்டுரை இதுவாகும் அத்தலங்கள் சங்கரன் கோவில்: தாருகாபுரம். கரிவலம் வந்த நல்லூர் தென்மலை தேவதானம் ஆகியனவாம்

**1. பிருதிவி (நிலம்) சங்கரன் கோவில்**

இத்தலம் நெல்லை கட்டபொம்மன் மாவட்டத்தில் நெல்லையிலிருந்து சுமார் 60 கி. மீட்டர் வடக்குத் திசையிலும் மதுரையிலிருந்து சுமார் 130 கி.மீ. தெற்கிலும் அமைந்துள்ளது.

இவ்வழகிய நகரின் மத்தியில் மிகப்பெரிய 9 நிலை கோபுரத்துடன் இக்கோயில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கி அமைந்துள்ள இவ்வாலய நுழைவாயிலில் வீற்றிருக்கும் விநாயகர் சுப்பிரமணியரை வணங்கி உட்செல்கிறோம். முன் மண்டபத்தில் இருமருங்கும் சுவாமிக்கு வேண்டிய பூ, பழம் விபூதி, வெற்றிலைப்பாக்கு சந்தனம், குங்குமம் விற்கும் கடைகள் உள்ளன. இம்முன்மண்டபத்திற்கு வடபுறம் கோவில் தீர்த்தக்குளம் அமைந்துள்ளது.

இத்திருக்கோவிலுள் தனித்தனியே மூன்று சந்நிதிகள் உள்ளன. பிரதான நுழைவாயிலின் எதிரே அமைந்துள்ளது அருள்மிகு சங்கரலிங்க சுவாமி சந்நிதி. கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ள சிவபெருமானை வழிபட்டு வெளியே வந்து வடபால் அமைந்துள்ள அருள்மிகு சங்கர நாராயணர் சந்நிதிக்குச் சென்று வழிபடுகிறோம். அரி அரன் பேதமின்றி இருவரும் இணைந்து காட்சி தரும் ஒப்பற்ற ஒற்றுமைத் தலம் இது. இச்சந்நிதிக்கு வடபுறம் கோமதி அம்பிகை எழுந்தருளியுள்ளார். குவலயம் காக்கும் அன்னை கோமதியை வழிபட்டு வெளி வருகிறோம். அம்மன் சந்நிதிக்கு வடகிழக்கு மூலையில் ஆறுமுகர் சந்நிதி அமைந்துள்ளது. குமரப் பெருமானை வழிபட்டு மகிழ்கிறோம்.

இத்திருக்கோவில் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் பாண்டிய மன்னர்கள் காலத்தில் கட்டப் பெற்றதாகத் தெரிகிறது. அம்பாளின் வேண்டுதலுக்கிணங்க சிவபெருமான் அரியும். அரனுமாகக் காட்சி கொடுக்கும் ஆடித்தவசுத் திருவிழா இம்மாவட்டத்தில் சிறப்புமிக்க விழாவாகும். நெல்லை கட்டபொம்மன் மாவட்டத்தில் அன்று உள்ளூர் விடுமுறை விடப்படுகிறது.

இத்திருக்கோவிலில் தினம் ஏழுகாலப் பூஜைகள் நடைபெறுகின்றன. இத்திருக்கோவில் தமிழக இந்து சமய அறநிலைய ஆட்சி துறையினரால் நிர்வகிக்கப் பெறுகிறது. உதவி ஆணையாளர் நிலையில் நிர்வாக அதிகாரி உள்ளார்

**2 அப்பு (நீர்) தாருகாபுரம்**

இத்தலம் சங்கரன்கோவிலிருந்து மேற்கே சுமார் 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.



மிகப்பழமையான திருக்கோவில். ஆலயம் தாருகாபுரம் கிராமத்தில் கிழக்கு நோக்கி மிகப் பெரிய முன் மண்டபத்துடன் காணப் பெறுகிறது. பிரதான நுழைவாயிலில் நுழைந்து முன்மண்டபத்துள் சென்றால், அம்மண்டபத்தின் வடபுறம் தெற்கு நோக்கி நடராஜர் எழுந்தருளியுள்ளார். அவரை வழிபட்டு உட்செல்ல இறைவன் மத்யஸ்திநாதர் என்ற திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளார். முன்னொரு காலத்தில் இருசாராருக்கிடையே நடந்த வழக்கினைத் தீர்த்து சமரசம் செய்து வைத்ததால் இத்திருநாமம் வந்ததாக கோவில் அர்ச்சகர் கூறுகிறார். சுவாமிக்கு பிணக்கறுத்த நாதர் என்ற மற்றொரு பெயரும் உண்டு. கருவறையைச் சுற்றி நீர் உள்ளது. சுவர்களிலும் நீர்ப்பதமாக உள்ளது. சுவாமி சந்நிதிக்கு தென்பால் அமைந்துள்ள அம்பாள் சந்நிதிக்குச் சென்று வணங்குகிறோம். இறைவியின் திருநாமம் அகிலாண்டேஸ்வரி அம்மன் ஏன்பதாகும். இத்திருக்கோவில் தலைவன் கோட்டை ஸமஸ்தானத்தாரால் பராமரிக்கப் பெறுவதாகத் தெரிகிறது. தினமும் காலை, மாலை இருநேரப் பூஜைகள் நடைபெறுகின்றன. இத்திருக்கோயிலில் வைகாசி விசாகம் ஏக தின (ஒருநாள்) உற்சவமாகக் கொண்டாடப் பெறுகிறது. இரு சந்நிதிகளுக்கும் சேர்த்து பெரிய வெளிப் பிரகாரம் அமைந்துள்ளது.

### 3 தேயு (நெருப்பு) கரிவலம் வந்தநல்லூர்

இவ்வூர் சங்கரன் கோவில் மதுரை நெடுஞ்சாலையில் நெல்லை கட்ட பொம்மன் மாவட்டத்தில் சங்கரன்கோவில் நகரிலிருந்து வடக்கே சுமார் 14 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூர் அழகிய சோலைகள் சூழ்ந்த கிராமம் ஆகும். இக்கிராமத்தில் ஊரின் மத்தியில் கிழக்கு நோக்கி இவ்வாலயம் அமைந்துள்ளது பிரதான நுழைவாயிலின் எதிரே காணப்பெறுவது இறைவன் சந்நிதி. இறைவி ஒப்பனை அம்பாள் சுவாமிகோவிலின் வடபுறம் தனிச் சந்நிதியில் எழுந்தருளி உள்ளார்.

### கோவில் தோன்றிய வரலாறு

தக்கனின் யாகத்தில் கலந்து கொண்டதால் தேவர்கள் சாபத்துக்குள்ளாயினர். தேவர்கள் தலைவன் இந்திரன் திட்டினியம் என்னும் நகரில் வாழ்ந்து வந்த வேடுவர்களின் குலத்தில் கிரி என்ற பெயருடன் அவதரித்து அக்குலத்தின் அரசனானான். இந்திராணி அவனுடைய மனைவியானாள். ஜயந்தன் அவன் மகனாகவும் அவதரித்தான். ஐராவதம் காட்டு யானையாகவும் பிறதேவர்கள் காட்டு யானைகளாகவும் பிறதேவர்கள் கானத்து விலங்குகளாகவும் தோன்றினர். கானகத்தில் உள்ள சிவலிங்கத்தின் மீது பற்றுக் கொண்ட காரியும் கண்ணப்பநாயனாரைப் போலஇறைச்சியை அளித்து வழிபட்டு வந்தான். இரவில் அதேலிங்கத்தை காட்டானையும் பிற மிருகங்களும் பூஜித்து வந்தன. இவ்வுண்மையை அறியாத காரி மிருகங்கள் தனது வழிபாட்டிற்கு ஊறு விளைவிப்பதாக எண்ணி அவற்றை வேட்டையாட முற்பட்டான். வேட்டையாடும் போது மிருகங்களால் தாக்கப்பட்ட காரியின் உறவினர்கள் இறந்தனர். யானையும் பிற விலங்குகளும் கொல்லப்பட்டன. இந்நிலையில் சிவபெருமான் காட்சியளித்து அனைத்து வானவர்களுக்கும் சாபவிமோசனம் அளித்தார். ஐராவதம் வலம் வந்து வணங்கியதால் இப்பதி கரிவலம் வந்த நல்லூர் என்று ஆயிற்று.

### இறைவன் பால்வண்ணநாதர் ஆனது

பாற்கடலில் தோன்றிய அமிர்தத்தை வஞ்சித்துப் பெற்று வெல்ல முடியாத நிலை அடைந்த தேவர்களை வெற்றி கொள்ள அசு



ரர்கள் விரும்பினர். சுக்கிராச்சாரியாரின் அறிவுரையின் பேரில் கருவைப் பதியிலுள்ள சிவலிங்கத்தை வழிபட்டனர். அதன் பயனாக ஒரு பால் தடாகம் தோன்றியது. அப்பாலைப் பருகினால் அசுரர்கள் அதிக ஆற்றலைப் பெறுவார்கள் என அஞ்சி வானவர்கள் முக்கண் முதல்வனைத் தஞ்சமடைந்தனர். ஓர் அழகிய புருஷனாக உதித்த சிவபெருமான் அத்தடாகத்தில் நீராடினார். உடனே பால் தடாகம் நீர்தடாகமாக மாறியது. இதனால் வெகுண்ட சுக்கிரன் அப்புருசனைத் துரத்தினார். அப்புருஷனும் லிங்கத்தில் ஐக்கியமாகிச் சுக்கிரனுக்கு அருளினார். பால் தடாகத்தின் நிறத்தை ஏற்றுக் கொண்டார். பால்வண்ண நாதர் என்ற பெயருடன் வெண்மை நிறத்துடன் காட்சியளிக்கிறது.

இத்திருக்கோவிலில் சுவாமி அம்பாள் திருக்கோவில்களைச் சுற்றி ஒரு மிகப் பெரிய வெளிப் பிரகாரம் உள்ளது. இத்திருக்கோவிலில் தினமும் ஆறுகாலம் பூஜைகள் நடைபெறுகின்றன. இத்திருக்கோவிலில் ஆவணிமாதம் ஆவணித் தவசுத் திருவிழா ஆண்டுதோறும் விமரிசையாக நடைபெறுகின்றது. இந்து சமய அறநிலையத் துறையால் நிர்வகிக்கப் பெறுகிறது.

4. வாயு : தென்மலை:

இத்தலம் நெல்லை கட்டபொம்மன் மாவட்டத்தில் கரிவலம் வந்த நல்லூர் தலத்திற்கு வடமேற்கே சுமார் 7 கி.மீ. தொலைவில் அமைர் துள்ளது. தென்மலை என்றும் பலையடிவாரத்தில் இத்திருக்கோவில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. பிரதான நுழைவாயிலின் எதிரே அமைந்துள்ளது அம்மன் சந்நிதி. இறைவியின் திருநாமம் அருள்தரும் சிறுபரிபூரணாம்பிகை. அம்மன் சந்நிதிக்கு வடபால் சுவாமிமேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். இறைவனின் திருநாமம் திரிபுரநாதேஸ்வரர். இவ்வாலயத்தில் தினமும் காலை; மாலை இருகாலப் பூஜைகள் நடைபெறுகின்றன. காற்றுத் தலமாகிய இச்சிவன் ஆலயமும் மிகப்பழமையானது. மேற்கு நோக்கிய சிவாலயம் ஆகும்.

5. ஆகாயம் : வெளி: தேவதானம்:

இவ்வூர் குற்றாலம் மதுரை பெருவழிச் சாலையில் காமராசர் மாவட்டத்தில் இராஜ பாளையம் நகருக்கு தெற்கே சுமார் 12 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. வாயுத் தலமாகிய தென்மலையிலிருநது வடமேற்கே சுமார் 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. தேவதானம் என்ற கிராமம் அழகிய தென்னை மா பலா போன்ற பயன் மரங்கள் சூழ்ந்துள்ள கிராமம் ஆகும். ஊரானது மதுரை குற்றாலம் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. ஆனால் சிவாலயம் தேவதானம் ஊருக்கு மேற்கே 2 கி.மீ. தொலைவில் அழகிய சோலைகளுக்கு மத்தியில் அமைந்துள்ளது. திருக்கோவில் முன்பாக ஒரு பெரிய திருக்குளம் அமைந்துள்ளது. ஆலயம் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. பிரதான நுழைவாயிலில் நுழைந்தவுடன் வெளிப் பிரகாரம் அமைந்துள்ளது. அதனை அடுத்து முன் மண்டபம். அதனையடுத்து எதிரே இறைவன் அருள்மிகு நச்சாடை தவிர்த்தருளிய சுவாமி எழுந்தருளி உள்ளார். சுவாமி சந்நிதி கிழக்கு நோக்கியும் அம்பாள் சந்நிதி சுவாமி சந்நிதிக்கு வடபுறம் தெற்கு நோக்கியும் அமைந்துள்ளன. அம்பாள் திருநாமம் அருள் தரும் தவம் பெற்ற நாயகி. வரலாற்றுச் சிறப்புமிக்க ஆலயம். இத்திருக்கோவில் தமிழக இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வகிக்கப் பெறுகிறது. நிர்வாக அதிகாரி ஒருவர் நியமிக்கப் பெற்று நிர்வாகம் செய்து வருகிறார். இத்திருக்கோவில் வைகாசி விசாகத் திருவிழா ஆண்டுதோறும் பிரம்மோற்சவமாக 10 தினங்கள் நடைபெறும். சுவாமி அம்பாள் உற்சவமூர்த்தி தேவதானம் ஊருக்குள் உள்ள திருக்கோவிலுக்கு எழுந்தருளி உற்சவம் நடைபெறும்.



றைவுறை:

சிவன் ராத்திரியன்று 7-3-97-ல் அடியேன் சென்று தரிசித்த பேற்றினை 'யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்பதற்கிணங்க இக்கட்டுரை எழுதப் பெற்றது.

# கஜேந்திர ஆழ்வார்

அமரர் நா. வேணுகோபால நாயகர்

ஸ்ரீ வைணவ சமயத்தின் கொள்கைகளில் சிறந்த கொள்கை சரணாகதிதான். சரணாகதியே ஸ்ரீமந்நாராயணனுடைய திரு அருளைப் பெறுவதற்குச் சிறந்த சுலபமான வழி.

சரணாகதி மார்க்கம் நான்காவது உயர்ந்த மார்க்கம். மற்றைய மார்க்கங்கள்-அதாவது இறைவனுடைய திருவருளைப் பெறுவதற்கு உதவும் வழிகள் எல்லோருக்கும் எளியவை அல்ல. முதலாவதான ஞான மார்க்கம் ரிசிகளுக்கும் அடைய முடியாததாகும் ஞானம் பெறுவதற்கே பலகாலமாகும்.

இரண்டாவதான பக்தி மார்க்கம் சுலபமாகக் கிட்டாது; மனதை அடக்கினால் தான் பக்தி செய்ய முடியும். இறைவனையே இடைவிடாது சிந்தனை செய்து கொண்டிருக்கும் பக்தி மார்க்கமும் எளிதில் அடையக் கூடியது அன்று.

மூன்றாவதான கைங்கரிய அல்லது கர்ம மார்க்கம் உடல் நலத்தையும் பொருள் வளத்தையும் பொறுத்தது. கைங்கரியத்திற்கு நேரமும் தேவை. எனவே இதிலும் கஷ்டம் உண்டு.

பிரபத்தி அல்லது சரணாகதி மார்க்கத்திற்கு எவ்விதக்கஷ்டமும் இல்லை. நாராயணா நீ தான் கதி என்று நம்பிக்கையுடன் அவன் மீது பாரத்தைப் போட்டுவிட்டு, மன அமைதி அடைய வேண்டும். இது போதும் சரணாகதி செய்வதற்கு.

இந்த மனநிலையை அடைந்து சரணாகதி செய்தால் இறைவன் நம்மைக் காப்பாற்றுவது திண்ணம். இதை விளக்குவதற்காக சிறப்பான ஐந்து சரணாகதிக் கதைகள் உண்டு.

1. தர்மபுத்திரர் தொடக்கமான பஞ்ச பாண்டவர்கள் செய்த சரணாகதி.
2. திரௌபதி செய்த சரணாகதி
3. காகாசுரன் செய்த சரணாகதி.
4. வீடணன் செய்த சரணாகதி.
5. கஜேந்திரனாகிற ஆனை செய்த சரணாகதி.

இந்த சரணாகதிகளில் ஆனையாகிற கஜேந்திரன் செய்த சரணாகதியே மிகச் சிறந்தது.

1. தர்மபுத்திரரும், அர்ச்சுனனும் ஏனைய பாண்டவர்களும் அரசு வேண்டுமென்று சரணாகதி செய்தனர். அரசு அழியக் கூடியது.

2. திரௌபதி தனக்குப் புடவை வேண்டி சரணாகதி செய்தாள். தனக்கு நேரப்போகும் அவமானத்தைக் காத்துக் கொள்ள சரணாகதி செய்தாள்.

3. காகசுரன் தனக்கு உயிர்ப் பிச்சை வேண்டுமென்று சரணாகதி செய்தான்.

4. வீடணன், தனக்கு இராமனுடைய பாதுகாப்பை வேண்டினான்.

5. அஃறிணைப் பிராணியான கஜேந்திரனோ, பெருமாளுக்குக் கைங்கரியம் செய்ய வேணும் என்று விரும்பி சரணாகதி செய்தான்.

கஜேந்திரனுடைய கதை எல்லோருக்கும் தெரிந்தது. அதில் உள்ள விசேஷங்களை மட்டும் விண்ணப்பிக்க விரும்புகிறேன்.

திருவல்லிக்கேணி திவ்விய தேசத்தைச் சேவிக்க எழுந்தருளிய திருமங்கை ஆழ்வார், கஜேந்திர வரதனைத் தொழுதார்.

கஜேந்திரனைக் காக்க கருடன் மீது ஏறி ஓடி வந்த திருக்கோலத்தை இந்த சந்நிதியிலே சேவிக்கலாம்.

இந்தத் திருக்கோலத்தைச் சேவித்த திருமங்கை மன்னன் கஜேந்திர மோட்சக்கதையை விஷயமாக வைத்து அரிய கருத்துகள் அடங்கிய ஒரு பாடலைப் பாடியுள்ளார். இந்த பாடலைப் பிரித்துப் படித்துக் கவனிக்கலாம்.

காட்டில் வாழ்ந்த கஜேந்திரனாகிய யானை, அதாவது 'கான் அமர் வேழம்'

மலர்களைப் பறித்து வருவதற்காக ஆசைப் பட்டு 'நாள் மலர் கொய்வான் வேட்கையினோடு' வளமான குளத்திற்குச் சென்று அதற்குள் இறங்கி 'மீனமர் பொய்கை சென்று இழிந்தது'

எதற்காகப் பொய்கைக்குள் புகுந்தது! கஜேந்திரன் அன்று அப்போது அலர்ந்த புஷ்பங்களைப் பறித்துப் பெருமாளுக்குச் சமர்ப்பிப்பதற்குத்தான், அதாவது

'நாள்மலர் கொய்வான்' (நாள்-புதிய)



அப்போது கஜேந்திரனுக்கு வந்த ஆபத்து என்ன? கஜேந்திரனின் காலினைப் பொய்கையில் இருந்த முதலை கவ்விப் பற்றிக் கொண்டது.

அதாவது 'கரா அதன் காலினைக் கதுவ' (கரா-என்றால் முதலை) உடனே யானை செய்தது என்ன!

தனது துதிக்கையை ஆகாசத்தை நோக்கி உயர்த்தி, 'ஆதிமூலமே' என்று ஓலமிட்டது. அதாவது 'கை எடுத்து அலற' என்ன நடந்தது?

ஆதிமூலமான பெருமாளும் கருடன் மீது ஏறிப் பறந்து ஓடி வந்தார் அந்தப் பொய்கைக் கரைக்கு,

அதாவது 'புள் ஊர்ந்து சென்று' கரையிலே இருந்த வண்ணம், குறிபார்த்து சக்கராயுதத்தைத் தொட்டதுதான் தாமதம்.

'நின்று ஆழி தொட்டானை'

ஒழிந்தது ஆனையின் மனவருத்தம்

அதாவது, 'ஆனையின் துயரம் தீர'

இங்கே ஆனையின் துயரம் என்ன என்பதை விண்ணப்பிக்க விரும்புகிறேன். கஜேந்திரனின் காலை முதலை கவ்விக்கொண்டு இழுக்கின்றது. யானையின் காலையே கவ்விக் கொண்டதால் ஏற்பட்ட வேதனைக்காக யானை துயரம் அடைந்ததா! முதலையின் பிடியில் அகப்பட்டு யானை தன் உயிருக்கு ஏற்பட்ட ஆபத்துக்கு அஞ்சி 'ஆதிமூலமே' என அலறியதா என்றால் இல்லை.

சந்தேகம், மறதி, தவறு இல்லாத ஞானத்தை உடையவர்கள் ஆழ்வார்கள். அப்பழுக்கற்ற ஞானம் படைத்தவர்கள் ஆழ்வார்கள் ஆவார்கள். இவர்கள் மயர்வற மதிநலம் உடையவர்கள். எனவே, திருமங்கையாழ்வாரின் திருவாக்கைச் சேவித்து நாம் உண்மை ஞானம் பெற வேணும்.

பொய்கையிலே தினமும் தாமரை மலர்கின்றது. அன்று அலர்ந்த தாமரை மலரை, அந்த மலர் வாடிவிடாத முன்பு பெருமாள் திருவடியில் சேர்ப்பது தான் கஜேந்திரன் விரும்பிய கைங்கரியம். அப்படி இன்றும் அலர்ந்த மலரை கஜேந்திரன் பறித்துவிட்டது. நாள்மலர் என்றால் அன்று அப்போது அலர்ந்த தாமரை மலர் என்று பொருள்.

'நாள் மலா கொய்வான் வேட்கையினோடு'
சென்று இழிந்த கான் அமர்வேழம்'

அன்று மலர்ந்த மலரை அது வாடாத முன்பு அதைப் பெருமாளின் திருவடிகளில் சேர்ப்பதற்கு முன், முதலையின் வாயில் அகப்பட்டுக் கொண்டது. அந்த மலரைச் சமர்ப்பிக்கு முன் அதற்கு இடையூறு ஏற்பட்டு, விட்டதே என்று கஜேந்திரன், வருத்தம் மிகுதியால்தான் அலறினான் பெருமானை நோக்கி'

'கை எடுத்து அலற'

கை எடுத்து அலற என்பதை முன்னே அமைத்து அதன் பிறகு

'கரா (முதலை) அதன் காலினைக்கதுவ

என்று பாசுரத்தில் திருமங்கை மன்னன் அமைத்துள்ள அழகை, நுணுக்கத்தைக் கவனிக்க வேணும். முதல் நடந்த காரியம் காலை முதலை கவ்விக் கொண்டது என்றாலும் அதை முதலில் அமைக்கவில்லை பாசுரத்தில் திருமங்கை மன்னன்.

பறித்த புஷ்பம் வாடி விடுமுன் அதைப் பெருமாள் திருவடியில் சேர்க்க முடியவில்லையே என்று பெருமாளை நோக்கி தும்பிக்கையை உயர்த்திக் கதறியதையே முதலில் அமைத்துள்ளார் கஜேந்திரனின் திருவுளத்தில் ஏற்பட்ட துயரம் என்ன என்பதை எடுத்துக் காட்டும் முறையில் திருமங்கை மன்னன்.

எனவே 'ஆனையின் துயரம்' என்று மங்கை மன்னன் திருவுள்ளத்தாலே, பறித்த மலர்வாடா முன்பே பெருமாளுக்குச் சமர்ப்பிக்கும் கைங்கரியம் தடைப்பட்டு விட்டதே என்ற துக்கமேயாகும் என்று, விண்ணப்பிக்கிறேன். முதலையால் ஏற்பட்ட ஆபத்தினால் தான் கஜேந்திரன் கதறினான் என்றால் பாசுரத்தில்;

'கரா அதன் காலினைக்கதுவ'

'கானமர் வேழம் கை எடுத்து அலற'

என்று பாசுரம் அமைந்திருக்கும்.

பெருமாளும் தான் பரமபதத்தில் இருந்தபடியே சக்கராயுதத்தை விட்டு முதலையைக் கொன்றிருக்கலாமே, ஏன் தலைகுலைய அரைகுலைய கருடன் மீது ஏறிப் பறந்து குளத்தின் மடுவின் கரைக்கு ஓடி வந்தார்!

பெருமாளுக்கும் யானையின் காலைக் கவ்விக் கொண்டிருந்த முதலையைக் கொல்வது இரண்டாம் காரியந்தானாம். அதைவிட முதல் காரியம் என்ன!

பக்தனான கஜேந்திரன் தன்னை ஆதி மூலமே என்று அலறி அழைத்தான். அவன் துதிக்கையில் உள்ள மலர் வாடுமுன் திருவடியில் சமர்ப்பிக்கத் துடித்தான். எனவே பெருமாளும் வேகமாக மடுவின் கரைக்கே எழுந்தருளி கஜேந்திரனைக் கடாட்சித்து அவன் பறித்த மலரையும் தன் திருவடிகளில் ஏற்றுக் கொண்டு, பக்தனின் கைங்கரியத்தையும் பூர்த்தி செய்தார். அதனால் முதலையைக் கொன்றது இரண்டாவது காரியமே என ஏற்படுகிறது.

இதுவும் நுணுக்கமான ஓர் பொருள். இதைத் தெரிவித்தருள்கிறார் நம்மாழ்வார். பெருமாள் எங்கிருந்தாலும் தானே போய் எதிரிகளை அழிக்கும் வல்லமை உடையது சக்கராயுதம்.

'மழுங்காத வை நுதிய சக்கரம்.'





இப்படிப்பட்ட சக்ராயுதத்தை ஏவி விடாமல் ஏன் பெருமாளே மடுவின் கரைக்கு எழுந்தருளினார்!

கஜேந்திரனாகிய களிற்றை (ஆண் யானையை) துதிக்கையால் தொழும் களிறு என்று, பாடுகிறார் நம்மாழ்வார். எப்படித் தொழுகிறது! உள்ளம் உருகத் தொழுகிறதாம், காதலுடன் தொழுகிறதாம். எனவே தொழும் காதல் களிறு என்று குறிப்பிடுகின்றார் நம்மாழ்வார். இப்படியான தொழுங் காதல், களிற்று யானைக்குத் தன் திருக்கோலத்தைக் காட்டி அதன் துதிக்கையில் உள்ள மலர் வாடு முன் அதைத் தன் திருவடியில் சேர்த்துக் கொள்வதற்காகவே ஓடிவந்தான் என்பதைக் காட்ட; அளிப்பான் என்றால் சேவை சாதித்துக் கடாட்சிப்பான் என்று பொருள்.

"தொழும் காதல் களிறு அளிப்பான்
புள் ஊர்ந்து தோன்றினையே."

என்று பெருமான் அவசரமாக எழுந்தருளிப் பக்தனாகிய கஜேந்திரனுக்குக் காட்சியளித்ததைப் போற்றி மகிழ்கிறார் நம்மாழ்வார்.

இவ்விதமான பக்தியால் தன் கஷ்டத்தையும் மறந்து, பெருமாளுடைய, கைங்கரியம் தடைப்பட்டு விட்டதே என்று வருந்திய கஜேந்திரனின் பக்திக்கு மெச்சி ஸ்ரீவைணவ உலகம் அவனை கஜேந்திர ஆழ்வான் எனப் போற்றுகிறது.

வாழ்க கஜேந்திராழ்வானுடைய பக்தி.
வளர்க அவன் காட்டிய பக்தி.'

---

# குலசேகர ஆழ்வார் அருளிய முகுந்த மாலை!

பேராசிரியர்
முனைவர் பார்த்தசாரதி
தமிழ்த்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை - 5.



வளமார் கோயம் பேட்டிலுறை
வைகுண் டத்தெம் பெருமானை
உளத்தே மதித்திங் குரைத்ததுவாய்
உணர்ந்தெங் குலசே கரஆழ்வார்
வள்ஞ்சேர் வடநூற் புலமையினால்
வார்த்த முகுந்த மாலையினை
வளமார் தமிழில் தந்தனனே
வைகுண் டவன்தன் தாள்தொழுதே.

## நூல்

அருளார் வரங்கள் தரும்முகுந்தா
அமுதாம் அருந்தாய்த் திருக்கேள்வா
கருணைக் கடலே கடும்பிறவிக்
கசட்டை அறுக்கும் பெருந்தேவே
அரவில் துயிலும் உலகொளியே
அனைத்தாய், அனைத்தின் உள்ளுறையாய்
இருக்கும் எழிலார் பெருமானே
ஏத்தித் தொழநீ அருள்வாயே. (1)

சிறையில் தவித்த தேவகியின்
சீரார் மைந்தா வென்றிடுக
குறையா நிறைசேர் ஆய்குலத்துக்
குன்றின் விளக்கே வென்றிடுக
நிறைர்தும் நிறையாக் கோபியர்மென்
நிலஞ்சேர் முகிலே வென்றிடுக
நெறியாய் நிலத்தின் சுமைதீர்த்தோய்
ரெடியோய் முகுந்தா வென்றிடுக. (2)

தொழுகைக் கலத்தைக் கரத்தேந்தித்
தூயோய் முகுந்தா வேண்டுகிறேன்
வழுத்தி நின்தாள் புகுந்துனைநான்
வாழ்வின் டொருளை வேண்டுகிறேன்
எழும்பல் பிறவி எதுவரினும்
இயைநின் அருளால் நின்தாளைத்
தொழுதுன் அடியாம் திருப்பேற்றுள்
தோயும் பேறே வேண்டுகிறேன். (3)

திருமாலேநின் திருவடியைத்
திருநா டெய்த வணங்கிலனே
அரிதாம் கொடுந்தீ நரகதனை
அகற்றற் காயும் வணங்கிலனே
அருஞ்சீர் அரம்பை முதலோரை
அணைத்தற் காயும் வணங்கிலனே
வரும்பல் பிறப்பில் உனைஉளத்தே
வைத்தேத் தற்கே வணங்கினனே. (4)

அறசாள் அறத்தில் பற்றிலன்நான்
அரும்பொன் மீதும் பற்றிலன் நான்
விரும்பும் காமக் களிப்புகளில்
விருப்பம் இலன்நான், விதிவழியே
இருந்தே கட்டும் இவைகளெலாம்
இருக்கும் இந்தப் பிறவியுளும்
வரும்பல் பிறவிக் கடல்களுளும்
வாழ்தற் கருள்நின் அடிநினைந்தே. (5)

நரகா கரனை வென்றளித்தோய்
நண்ணும் என்றன் வாழ்வதுதான்
அரும்வான் உலகாய் இருக்கட்டும்
அடையும் புவியாய் இருக்கட்டும்
நரகர் உலகாய் இருக்கட்டும்
நற்றா மரையை வென்றொளிர்நின்
இருசீர் அடியே இறப்பினிலும்
இருக்க மனத்துள் நினைத்தனனே. (6)

மனமாம் அரசத் திருவன்னம்
மலர்நின் கமலத் திருவடியாம்
இனிதாம் கூட்டுள் நுழைந்துய்க
இன்றே புகுந்தங் குய்ந்திடுக
கனிபோல் உயிர்தான் உதிர்கையிலே
சுபங்கள் வாதப் பித்தமெலாம்
பிணித்தென் நெஞ்சை அடைக்கையிலே
பேதை மனந்தான் நினைந்திடுமோ. (7)



முறுவல் பூத்த தாமரைபோல்
முகத்தோன் தனையே தொழுகின்றேன்
அறவோன் நந்த கோபனவன்
அழகார் மகனைத் தொழுகின்றேன்
நெறியோர் தவத்தோர் நாரதனார்
நினைந்தேத் திடும்என் திருமாலை
அறிவால் அறிந்தே தொழுகின்றேன்
அரியைப் பரனைத் தொழுகின்றேன். (8)

கண்கள் எனும்பல் மீன்களினால்
கைகால் எனும்பல் தாமரையால்
எண்ணில் துயர்கள் தமைநீக்கும்
எழிலார் தோளாம் அலைகளினால்
மின்னும் ஞானப் பெருவழியாய்
மேவும் அரியாம் தடாகத்துத்
தண்ணீர் மாந்தி வெம்பாலை
தனில்வாழ் தாகம் தணித்தனனே. (9)

தணடா மரைச்சிர்க் கண்ணவனை,
சங்கோ டாழி ஏந்தினனை,
அன்றம் முரனை அழித்தவனை,
அடைந்த நெஞ்சே விடேல்அவனை
என்றும் அவன்சீர் அடியமுதம்
இயைக்கும் உயர்நல் நலன் அதனில்
இன்றும் கோடிக் கொன்றினையும்
ஈங்கிவ் வலகில் பெறல்அரிதே. (10)

அலகில் துயர்கள் எமன்தரினே
அவற்றைத் தாங்கும் நிலையெணணிப்
பலவா றஞ்சும் மடமனமே
பரமன் திருமால் நம்தலைவன்
நலமில் மடியை நலித்தெறிநீ
நாராயணனை நினைர்திருநீ
உலகின் துயர்கள் துடைத்தருள்வோன்
உன்றன் துயரா துடைத்தருளான்? (11)

பிறப்பாம் இறப்பாம் பெருங்கடலில்
பிணங்கும் இன்பம் துன்பமென
உறும்பல் புயல்கள் தாக்குதலால்
உளையும் உலகீர் புகல்கொள்வீர்
மறந்திவ் வுலகச் சுகங்களுளே
மாழ்கும் உலகீர் புகல்கொள்வீர்
சிறந்த ஓடம் திருமாலே
சேர்வீர் அவன்பால் கரைசேர. (12)

ஆழம் ஒளியக் கடும்பற்றாம்
அலையாய் பிறவிப் பெருங்கடலை
ஏழை மனந்தான் கடந்திடுமோ?
என்றே அஞ்சி உளைநெஞ்சே
பாழாய் நரகன் வீழ்ந்தொளிரப்
படைகள் தொடுத்த அருள்மால்மேல்
ஆழம் பதியா அன்புறினும்
அதுவே கடலைக் கடத்திடுமே. (13)

உலக வாழ்வாம் பெருங்கடல்தான்
ஒருபேர் ஆசை நீரதுவே
அலையும் காம அலையதுவே
ஆழ்த்தும் மனையாம் சுழியதுவே
குலவும் மக்கள் உற்றோராய்க்
கூடும் முதலைக் கூட்டமதே
கலங்கி மூழ்கும் துயர்தீரக்
கழல்தாள் ஓடம் தருவாயே (14)

உலகின் தலைவா ஒருகணமும்
உன்தாள் எண்ணார் தமைக்காணேன்
அலகில் புகழ்சேர் நின்கதையை
அலாமல் வேறோர் கதைகேளேன்
மலராம் நெஞ்கள் நினைஏத்த
மறுப்போர் வெறுப்போர்தமை
யெண்ணேன்,
நிலவும் பிறப்பில், பிறபிறப்பில்,
நினைநான் நினையா திருப்பேனோ? (15)

நாக்கே மொழிக கேசவனை
நெஞ்சே புகழ்க முராரியினை
பூக்கள் பொழிக கையிரண்டும்
புகழ்கள் கேட்க காதிரண்டும்
நோக்கம் கொள்க கண்ணிரண்டும்
நோக்கிச் செல்க காலிரண்டும்
மூக்கே துளப மணம்நுகர்க
முடிசேர் தலையே வணங்குகவே. (16)

பிறப்பை அறுக்கும் மருந்ததனைப்
பெரியோர் யாக்ஞ வல்கியனார்
அறிந்தே மொழிந்தார் அது இதுவே
அருளார் ஒளியாம், அளப்பரிதாம்
செறிந்த ஒன்றாம் திருவுளதாம்
சீர்கொள் கண்ணத் திருவமுதே
நிறைஇவ் வமுதை மாந்தினரேல்
நீங்கா முத்தி நுமக்குறுமே. (17)

துயரப் பிறவிப் பெருங்கடலின்
கழலுள் தவிக்கும் மானிடரே!
மயர்வில் முத்திப் பெரும்பேற்றுள்
மகிழும் வழியைக் கூறுகிறேன்
உயர்வில் கல்வி பலவீழ்த்தி
உயர்ஓம் நமோநா ராயணாவை
முயன்று பலகால் மொழிவிரேல்
முகுந்தன் அருள்தான் வாராதோ.? (18)

முகுந்தா உன்னைக் காண்கையிலே
    முழுஇவ் வுலகம் சிறுதூசு
மிகும்பல் கடல்கள் சிறுதிவலை
    மேலாம் கதிர்ஓர் தீப்பொறியே
புகும்பேர் காற்றும் சிறுமூச்சே
    போர்த்த வானம் சிறுதுளையே
தகவில் தேவர் பலர்புழுக்கள்
    தகும்நின் உயர்வே வெல்கிறதே. (19)

வணங்கிப் போற்றும் தலையோடும்
    வழுத்திக் கூப்பும் கையோடும்
இணங்கும் அன்பின் நிலைக்கேற்ப
    எழும்மெய்ச் சிலிர்ப்பாம் பொடிப்போடும்
மனத்தின் உருக்க நிலைக்கேற்ப
    வழியும் கண்ணீர்க் கண்ணோடும்
மனத்தால் நினைத்துன் சுவையருந்தும்
    வாழ்வாய் நிறைக எம்வாழ்வே. (20)

கருணைக் கடலே ஆநிரைகள்
    காத்தோய் திருவின் அருட்கேள்வா
அருளில் கம்சன் விழக்கொன்றோய்
    அருளால் யானைக் குய்வளித்தோய்
பெருமா தவனே ஆசானே
    பேரின் பதனைக் கோபியர்தம்
திருவார் புலனுள் பெய்தவனே
    நினையன் றில்லேன் காத்தருளே. (21)

எவன்தன் அடியார் துயர்ப்பாம்பாம்
    இன்னல் கழிக்கும் கருடமணி
எவன்ஆய்ப் பெண்டிர் கண்களெனும்
    எழிற்சா தகத்தின் முகிலமணி
எவன்பெண் குலத்தின் இரத்தினமாம்
    உருக்கு மிக்கோர் ஒளிருமணி
எவன்மூ வுலகின் காப்புமணி
    அவனே நமக்கும் காப்புமணி. (22)

எழிலார் என்றன் திருநாக்கே
    என்றும் மறைகள் போற்றுமொழி
ஒழிவில் பிறப்பை, பகைநிலையை
    ஓர்அஞ் ஞான இருள்இடரை
எழும்பல் துயரப் பாம்புகளாய்
    இயையும் நரகை ஒழிக்குமொழி-
வழுத்தும் கண்ணத் திருமொழியே
    வழுத்துன் வாழ்நாள் முழுவதுமே (23)

கண்ண மருந்தே மாமருந்தாம்
    கலக்கும் மயர்வின் மாமருந்தாம்
எண்ணில் முனிவர் நெஞ்சையெலாம்
    இறைபால் சேர்க்கும் மாமருந்தாம்
புண்ணை அரக்கர் பெறவைத்துப்
    புனிதர்க் கருளும் மாமருந்தாம்
நண்ணும் பிறப்பை ஒழிமருந்தாம்
    நல்நெஞ் சேநீ நிதம்பருகே. (24)

திருமால் அடியைப் போற்றாமல்
    தினமும் மறைகள் பயில்வதெலாம்
கருங்காட் டின்கண் புலம்புதலே
    கடமை புரிதல் உடற்கொழுப்பைக்
கரைக்கும் செயலே அறஞ்செய்தல்
    கறுப்புச் சாம்பல் வேள்வியதே
பெருகும் கங்கை நீராடல்
    பெருங்குஞ் சரத்தின் குளிப்பாட்டே. (25)



திருவாழ் நாரா யணாநாமம்
    செப்பிப் பிழைத்தார் பாவியரும்
அருஞ்சொல் ஒன்றால் வீட்டுலகை
    அடைந்தார் அதனை அறியாதே
கருவில் புகுந்து கழித்தேனே
    கைக்கும் துயர்க்காய்த் துய்த்தேனே
ஒருவர் கூட அச்சொல்லில்
    ஒன்றும் விளக்கா திருந்தனரே. (26)

கொடியோன் மதுவைக் கைடவனைந்
    கொன்றோய் உலகப் பெருந்தலைவா
அடியேன் வேண்டும் வரம்இதுவே
    அடியார் படியுள் ஏழாகும்
அடியார் நிலையில் ஏற்றருளே
    அடியார் அடியார் அடியார்தம்
அடியார் அடியார் அடியாரின்
    அடியார் எனநீ ஏற்றருளே. (27)

மூவர் உலகிற்கொரு தலைவன்
    முழுதாய் வணங்கின் தனைத்தருவோன்
தேவன் நாரா யணன்தன்னைச்
    சீரார் தலைவன் எனப்பெற்றும்
தேவைக் குரிய பொருள்நல்காத்
    தெரியாத் தரமில் மனிதர்களைத்
தேவைக் கணுகி அலைகின்றோம்
    தெரிவீர் நாம்தாம் கடையர்களே. (28)

இளமைக் குறும்புள் எனைவீழ்த்தி
    இதயத் தமர்ந்த மன்மதனே
உளமாம் இருப்பை மாற்றிக்கொள்
    ஓர்ஓர் முறைநீ சிவன் கண்ணால்
கொளுத்தப் பட்டாய் அழிவுற்றாய்
    குறும்புக் காரா! திருமாலின்
அளப்பில் ஆற்றல் ஆழியதன்
    அருளிச் செயலை மறந்தனையோ? (29)



நாக்கே உன்னை வணங்குகிறேன்
நாரா யணன்தன் திருப்பேராம்
பூக்கள் கொண்டே புகழ்ந்தேத்து
பொழியும் அமுதின் உயிர்ப்பதுவாய்
மீக்கூர் உயர்வின் உயர்வதுவாய்
மேலாம் பொருளின் மேன்மையவாய்
ஆக்கும் பயனின் அருள்விளைவாய்
அமைந்த திருப்பேர் அதுவொன்றே. (30)

ஓடும் கால முதிர்ச்சியினால்
உளுத்தும் இளைத்தும் மாய்உடலை,
போடும் மூட்டுப் பூட்டுகளுள்
புகும்வெள் எலும்பு தேய்வுடலை
நாடிக் காக்க ஆசையினால்
நாளும் மருந்தைத் தேடியுணும்
மூட நெறியீர் கண்ணனெனும்
முழுதாம் அமுதே அருந்துவிரே. (31)

திருவாம் என்தாய் நின்துணைவி
சேர்ந்த மகனோ அயன் ஆவான்
கருதித் துதிப்ப தருள்வேதம்
கழல்சேர் பணியாள் பெருந்தேவர்
தரும்பே றதுவோ அரும்முக்தி
தாய், பொய் உலகில் தேவகியே
விரும்பும் நண்பன் வில்விசயன்
வேறொன் றுன்பால் நான் அறியேன்.(32)

உலகம் மூன்றின் உயர்தலைவன்,
ஒப்பில் கண்ணன், காக்கட்டும்
பலவாம் தேவர் பகைஅழித்தோன்
பரமன் நம்மைக் காக்கட்டும்
மலரும் உலகை மகிழ்ந்தருள்வோன்
மகிழ்நன் நம்மைக் காக்கட்டும்
அலகில் உலகிற் கடைக்கலமாய்
அமைவோன் நம்மைக் காக்கட்டும். (33)

தோற்றம் முடிவில் தூயோனே
தொழத்தக் கவர்கள் தொழும்மணியே
சீற்றம் கொண்டே சிதைக்கவரும்
சினத்தீத் துயர்கள் சிதைத்தழிய
ஊற்றம் பொங்கக் காப்பவனே
உனைநான் தொழுதேன் அருள்புரியே
தோற்றுப் பிறவிக் கடல்மூழ்கித்
தொலையும் எனைநீ காத்தருளே. (34)

நாரா யணனாம் உயர்பொருளே
நாளும் நாளும் நினைக்கின்றேன்
நாரா யணனின் திருப்பெயரே
நாளும் நாளும் மொழிகின்றேன்
நாரா யணர்க்காம் குறுந்தொழிலே
நாளும் நாளும் புரிகின்றேன்
நாரா யணனின் அருளடியே
நாளும் நாளும் வணங்குகிறேன். (35)

அருளார் திருவின் பெருங்கேள்வா
அருள்அச் சுதனே நாரணனே
உருகும் அன்பர்க் குழைப்பவனே
ஒளிரும் முராரி மதுகைடர்
இருவர் மாய ஆழியினை
எடுத்தோய் பதுமத் திருநாபா
கருணைக் கடலே எனஉன்பால்
கருதா துளரே வியப்பென்னே. (36)

திருவை குண்டப் பெருமானே
சிறுமென் தாம்பால் பிணித்திட்ட
அருந்தாய் யசோதை திருமகனே
அருளார் அனந்தா ஆகாத்தோய்
அருள்மா தவனே என உன்தாள்
அடைந்து போற்றும் வழிகண்டும்
கருவில் திருவில் துயர் உலகோர்
கருதா துளரே வியப்பென்னே. (37)

எவர்தாம் முடிவின் முடிவாக
இருக்கும் பிரானைத் தொழுதெழுவோர்
எவர்தாம் இதயக் கமலத்தில்
இருதாள் பதித்துத் தொழுதெழுவோர்
எவர்தாம் புலனில் நஞ்சறுத்துக்
குளிர நினைத்துத் தொழுதெழுவோர்
அவரே திருமால் அருளாலே
அடைவார் திருநா டெனும்பேறே. (38)

திருப்பாற் கடலின் அலைத்துளிகள்
சேர்ந்த மேனி விண்மீன்வாழ்
கருவான் போலக் காட்சிதரக்
காற்றுண் சேடன் மேல்ஒளிரும்
கரும்பே மதுவை வென்றொழித்தோய்
கற்புச் சீதைக் கருளிடமாய்
இருந்த கோயம் பேட்டிலுறை
இறைவா முதலே வணங்குகிறேன் (39)

அரும்அந் தணர்க்கும், அருளோர்க்கும்
அமைந்துள் உறையும் முகுந்தன்தாள்
விரும்பித் தமிழ்நூல் வடமொழிநூல்
விளைத்தார் டெருமாள் திருமொழியார்
திருவார் கோயம் பேட்டிலுறை
திருமா லார்க்காம் எனத்தெளிந்தே
பொருள்சேர் வடநூல் திருமொழியைப்
புகழ்சேர் தமிழில் ஆக்கினனே. (40)

# சிறுத் தொண்டர் சீர் போற்றி

கி. ஸ்ரீ தரன். எம்.ஏ.,
பதிவு அலுவலர்,
தொல்பொருள் ஆய்வுத் துறை,
திருச்சி.

சைவ சமயம் போற்றும் நாயன்மார்களில் சிறப்பாகப் போற்றப்படுபவர் சிறுத்தொண்ட நாயனார் ஆவார். செயற்கரும் செயல் செய்த மூன்று நாயன்மார்களைப் பட்டினத்தடிகள் தம் பாடலில் போற்றுகின்றார்.

'வாளால் மகவரிந்துட்ட
வல்லேனல்லேன் மாது சொன்ன
சூளால் இளமை துறக்க
வல்லேனல்லேன் தொண்டு செய்து
நாளாறிற் கண்ணிடந்தப்பவல்லே
னல்லேன் நானினிச்சென்று
ஆளாவதெப்படியோ
திருக்காளத்தியப்பனுக்கே''

அறுபத்திமூன்று நாயன்மார்களில் சிறுத்தொண்டர் திருநீலகண்டர் கண்ணப்பர் ஆகிய மூவரையும் சிறப்பாகப் போற்றியுள்ளார்கள் சிறுத்தொண்டரின் இறைபக்தி எல்லோராலும் போற்றக்கூடிய வகையில் அமைந்திருப்பதால் முதன்மையாக வைத்துப் போற்றப்படுகிறது.

வரலாறு: சிறுத்தொண்டர் திருச்செங்காட்டங்குடி என்னும் ஊரைச் சேர்ந்தவர். இவரது இயற்பெயர் பரஞ்சோதியாகும். இவர் பல்லவ மன்னனுக்கு தானைத் தலைவராய் அமர்ந்து வாதாபி வரை சென்று போரில் வென்று பல பொருட்களைக்கவர்ந்து வந்தார். இவருடைய இறைபக்தியைக் கண்டு மன்னன் போர்ப் பணியிலிருந்து ஓய்வு அளித்தான் திருச்செங்காட்டங்குடி ஊருக்குத் திரும்பி சிவன் அடியார்களுக்கு நாள்தோறும் அமுது அளிக்கும் 'திருத்தொண்டில் ஈடுபட்டார். இறைவன் அவரது சிறப்பினை உலகுக்கு எடுத்துக் காட்ட விரும்பி பைரவ அடியார் கோலம் தாங்கி பிள்ளைக் கறி வேண்டினார். 'சிறுத்தொண்டரும் அவர் மனைவி திருவெண் காட்டு நங்கையும் மனம் கலங்காமல் தமது



ஒரே மகனை அரிந்து உணவாக்கிப் படைத்தனர். உணவு உண்ண அமர்ந்தபொழுது உங்கள் மகனையும் உணவு உண்ண அழையுங்கள் என்று பைரவர் கூற திருவெண்காட்டு நங்கை 'செய்ய மணியே சீராளா வாராய் சிவனடியார் யாம் உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கிறார் என்று அழைக்க பள்ளியிலிருந்து திரும்பும் சிறுவனைப் போன்று

சீராளன் ஓடிவர இருவரும் மகிழ்ந்து தழுவிக் கொள்கின்றனர். இறைவனும் தனது தேவியுடன் தோன்றி சிறுத்தொண்டரின் இறை அன்பினை உலகுக்கு உணர்த்தி அவர்கள் அனைவரையும் கைலாயம் அழைத்துச் செல்வதாக பெரியபுராணம் கூறுகிறது.

## திருச்செங்காட்டங்குடி

தஞ்சை மாவட்டத்தில் நன்னிலம் வட்டத்தில் நன்னிலம்-நாகபட்டினம் சாலையில் திருப்புகலூர் அருகே இத்திருத்தலம் அமைந்துள்ளது. 'காவேரி திருநாட்டு வளங்காட்டும் செங்காட்டங்குடியாகும்' எனச் சேக்கிழார் பெருமான் போற்றுகின்றார். இவ்வூர் மந்திர புரி, செங்காடு, சத்யபுரி, பிரமபுரி, ஆத்தி வனம், பாஸ்கரபுரி, சமுத்திர புரி, இந்திரபுரி என்று பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறது. மேலும் இவ்வூர் செங்காட்டங்குடி என்றும், திருக்கோயில் கணபதிச்சரம் என்றும் அழைக்கப்படுகிறது. திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்தின் மீது பதிகங்கள் பாடி உள்ளனர்.

'பக்திக்கே வழிகாட்டி பாவந்தீர்த்தும்
பண்டை வினைப்பயனான எல்லாம்
போக்கித் தித்தித்தென் மனத்துள்ள
ஊறுந்தேனைச் செங்காட்டங்குடி
யதனிற் கண்டேன் நானே'

என்று நாவுக்கரசர் கூறுகிறார். இக்கோயிலின் உட்பிரகாரத்தில் கரங்களை உயர்த்தி வழிபடும் நிலையில் சிறுத்தொண்டர் அவர்மனைவி சீராளன் தாதிப் பெண் சந்தன நங்கை ஆகியோரது திருஉருவங்கள் காணப்படுகின்றன. சிறுத்தொண்டர் அனைவருடனும் கைலாசம் செல்லும் காட்சி புடைப்புச் சிற்பமாகவும் அமைக்கப்பட்டுள்ளது.

## கலவெட்டுக்களில்

திருச்செங்காட்டங்குடி திருமருகல்நாட்டு திருச்செங்காட்டங்குடி' எனவும் திருச்செங்காட்டங்குடி பரமேசுவரர் கணபதிசுரம் உடையார் என்றும் கல்வெட்டுக்களில் அழைக்கப்படுவதைக் காணலாம். இக்கோயிலில் உத்தமச் சோழன் முதலாம் இராசராசன் முதலாம் இராசேந்திர சோழன் முதலாம் குலோத்துங்கன், மூன்றாம் குலோத்துங்கன் முதலியோரது கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. உத்திராபதிசுவரர் கோயிலில் நடக்கும் 'சிறுத்தொண்ட நம்பி திருவிழா' செலவிற்காக நிலம் கொடுத்த செய்தியும் சித்திரைத் திருவாதிரைத் திருநாளில் திருவிழாவிற்கு வரும் அடியார்க்கு 'சிறுத்தொண்ட நம்பி மாளிகையில் 'உணவு படைக்க தானம் அளித்ததாகவும் முதலாம் இராச ராச சோழன் கல்வெட்டு கூறுகிறது. இறைவனை திருச்செங்காட்டங்குடி மகாதேவர் சீராள தேவர்' . என்றே குறிப்பிடுவதைக் காண்கிறோம் சிறுத்தொண்டர் மகனுக்கும் சீராளன் என்றே பெயர் ஆகும்.

திருமுத்து வானெறி என்று அழைக்கப்பட்ட மண்டபத்தில் சித்திரைப் பரணியில் உத்திராபதி நாயனார் எழுந்தருளியிருந்து பக்தர்களுக்கு முக்தி கொடுத்தருளுகின்ற விழாவிற்கும், திருவைகாசி திருநாள் ஐப்பசி திருநாள் ஆகியவற்றுக்கு வேண்டும் செலவுகளுக்குத் தானம் அளித்ததாக மூன்றாம் இராச ராச சோழன் கல்வெட்டுகூறுகிறது. சித்திரை, ஐப்பசி மாதங்களில் வரும் பரணி நாளில் கணபதிசுவரம் உடையார் கோயிலில் உள்ள உத்திராபதி நாயகருக்கு வழிபாடு நடத்த தானம் அளிக்கப்பட்ட செய்தி ஒரு கல்வெட்டில் கூறப்படுகிறது. இன்றும் சித்திரை மாதம் பரணி நட்சத்திரம் அன்று' அமுது படையல் விழா' கொண்டாடப்பட்டு வரப்படுகிறது. 'ஆறுதிங்கள் ஒழிந்துண்போம்' என்று பெரிய புராணத்தில் கூறியதற்கிணங்க சித்திரை பரணியிலும் ஐப்பசி பரணியிலும், உத்திராபதி இறைவனுக்குச் சிறப்பான வழிபாடுகள் நடத்தப்படுகின்றன.

## சிற்பங்கள் செப்புத் திருமேனிகள்

சிறுத்தொண்டர் வரலாறுபல்லவர் காலத்திலிருந்தே தொடர் சிற்பமாக அமைக்கப்படும் வழக்கத்தினைக் காணலாம். தஞ்சைப் பெரிய கோயிலில் கல்வெட்டில் சிறுத்தொண்டர் வரலாறு ஒரு முக்கிய இடம் பெறுகிறது. சிறுத்தொண்ட நம்பி, திருவெண்காட்டு நங்கை பைரவமூர்த்திகள் ஆகிய செப்புத் திருமேனிகளைப் பொய்கைநாடு கிழவன் என்பவன் செய்தளித்தான் என முதலாம் இராசராசன் கல்வெட்டு கூறுகிறது.

எனவே இக்கோயிலில் 'சிறுத்தொண்டர் திருவிழா நடத்த இராசராசன் கருதியிருக்க வேண்டும். திருச்செங்காட்டங் குடியிலும் சிறுத்தொண்டநம்பி திருவிழா நடத்த முதலாம் இராசராசசோழன் தானமளித்ததை இங்கே நினைவு கூறவேண்டும். தாராசுரம் கோயிலில் பெரியபுராணச் சிற்பங்களில் 'சிறுத்தொண்டர் கதை' என்ற தலைப்பில் சிறுத்தொண்டர் வரலாற்று நிகழ்ச்சி நான்கு பகுதிகளாக சிற்பங்களில் செதுக்கப்பட்டுள்ளதைக் காணலாம். அண்மையில் இக்கோயிலில் நடைபெற்ற கட்டுமானப் பணியின்போது சிறுத்தொண்டர். திருவெண்காட்டு நங்கை நடுவில் சீராளதேவர் ஆகியோர் ஒரே பீடத்தில் நிற்கும் நிலையில் உள்ள சோழர்காலச் செப்புத் திருமேனி ஒன்று கிடைத்துள்ளது இதன் பீடத்தில் அவர்களின் பெயர்களும் டொறிக்கப்பட்டுள்ளது. சிறுத்தொண்டர் செப்புத் திருமேனி மட்டும் இங்கு கிடைத்தது குறிப்பிடத்தக்கது. காஞ்சிபுரம் ஏகாம்பரேஸ்வரர் கோயிலில் குளத்தின் அருகே அதிட்டானப் பகுதியில் சிறுத்தொண்டர் கதை தொடர் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. அளவில்லா பக்திக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் சிறுத்தொண்டர் வரலாற்றில் கலைச் சான்றுகளும் முக்கிய இடம் பெற்று விளங்குவதைக் காண்கிறோம்.

# பொருட்காட்சியில் நமது அரங்கம்

எம். சம்பத்குமார், பி.இ.,
உதவிப் பொறியாளர், இந்து சமய அறநிலையத்துறை, சென்னை-34.

இந்த ஆண்டு சுற்றுலா மற்றும் தொழிற் பொருட்காட்சியில் அமைக்கப்பட்டிருந்த நமது அறநிலையத்துறை அரங்கைப் பல லட்சக் கணக்கான அன்பர்கள் பார்த்துப் பயன் பெற்றார்கள். நமது அரங்கைப் பார்வையிட்ட பார்வையாளர்களின் புத்தகக் குறிப்பிலிருந்து இக்குறிப்புகளை எடுத்து வெளியிடுவதில் அளவற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

நீதிபதி உயர்திரு. எஸ். மாரிமுத்து அவர்கள், உயர்நீதிமன்றம், சென்னை-1.

அறநிலையத்துறை அரங்கம் சிறப்பாக அமைந்துள்ளது. இறைவன் மீது மக்களுக்கு பற்று எப்போதும் அமைய வேண்டும் என்ற நிலையில் இந்த அரங்கம் அமைந்துள்ளது. அறநிலையத் துறைக்கு என் உளமார்ந்த வாழ்த்தினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

2. திரு. எஸ். சண்முகசுந்தரம் அவர்கள், கூடுதல் இன்ஸ்பெக்டர் ஜெனரல், பதிவுத்துறை ஓய்வு,-சென்னை.

இந்து அறநிலையத்துறை அரங்கினுள் தெய்வீக ஒளிவீசக்கண்டேன். குழந்தைகள் இறைவனின் திருவருள் குறித்து அறிந்து கொள்ளும் வகையில் பக்திச் சுவையுடன் அரங்கம் அமைந்துள்ளது.

3. திரு. மீனாட்சிசுந்தரம், உதவி ஆணையர் அவர்கள்,—காவல்துறை சென்னை.

இந்து அறநிலையத்துறை அரங்கிற்கு சக அதிகாரிகளுடன் வந்து பார்த்தேன். நன்றாக இருக்கிறது.

4. திரு. கே. சுப்ரமணியன் வழக்கறிஞர் 4]487 ஜெ. ஜெ. நகர். சென்னை.

இந்தியச் சுற்றுலா மற்றும் தொழில் பொருட் காட்சியில் அமைக்கப்பட்ட பலதரப்பட்ட அரங்குகளில் இந்து சமய அறநிலையதுறை அரங்கின் வெளித் தோற்றம் பார்வையாளர்களைக் கவரும் வண்ணம் அமைந்துள்ளது. அரங்கின் உள்ளே ஏற்பாடு செய்துள்ள ஒளி-ஒலி காட்சி ஒவ்வொரு ஸ்தலமும் நேரில் சென்று பார்த்த உணர்வை ஏற்படுத்தி யுள்ளது.

5. திரு. ஆர். வீரப்பட்டர் அய்யர். அசுரம் போஸ்ட், — முண்டியம்பாக்கம் வழி — 605601.

திருக்கோயில்களை ஓரிடத்தில் கண்டு மகிழ்ந்தோம்.

6. திரு. எஸ். ஆர். வி. அழகப்பன், இரண்டாவது தெரு, எஸ். எஸ். வி. எல். நகர் சென்னை— 42.

கோயில்களின் சிறப்புக்கள் கருடசேவை, தங்கரதங்கள், கவசங்கள் மிகவும் சிறப்பாக இருக்கின்றன.

7. திரு. சங்கரநாராயணன், 20, பால கிருஷ்ணா தெரு, சென்னை-33.

மிக்க அழகான காட்சிகளை கண்முன் கொண்டு வந்ததற்கு மிக்க நன்றி.

8. திரு. மனோன்பணி குலசேகரன், சென்னை

இந்த வருடம் மிகவும் அற்புதமாக கோயில்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீரங்கம் கோயில், வரதராஜபெருமாள் கோயில் மிகவும் தத்ரூபம்.

9. திரு. ராதாகிருஷ்ணன் பி.இ., உதவி பயிற்சி அலுவலர். அரசு தொழிற்பயிற்சி நிலையம், கே. புதூர், மதுரை-7.

பக்தி சுற்றுலா சென்று வந்த உணர்வு ஏற்பட்டது.

10. திரு. கணேசன் மூர்த்தி, வள்ளலார் மாவட்டம்.

இதுவரை பார்த்த பொருட்காட்சியை விட இந்த முறை கண்ட பொருட்காட்சியில் விவரங்கள் கூடியவரை சிறப்பாக எழுதப்பட்டுள்ளது.

11. திரு. ஆர். வெங்கடகிருஷ்ணன் திருவல்லிக்கேணி.

பெரும்பாலான புகைப்படங்கள் நகரங்களில் உள்ள திருக்கோயிலை சார்ந்ததாக உள்ளது. கிராமப் புறங்களில் புராதன மிக்க எவ்வளவோ திருக்கோயில்கள் இன்றும் காலத்தால் அழியாமல் உள்ளன. அவற்றின் புகைப்படங்கள் வைக்க வேண்டும் என்று வேண்டுகிறேன்.

12. திருமதி எஸ். புவனேஸ்வரி

சீர்காழி நாங்குனேரி கருடசேவை பார்த்தவுடன் நான் அந்த ஊருக்கு சென்றுநேரில் கண்டது போல் மன மகிழ்ந்தேன்.

13. திரு. என்.சி. திருவேங்கடன் 49, குமாரசாமி முதலி தெரு வரதராஜபுரம், அம்பத்தூர்.

அரங்கு அமைப்பு மிகச் சிறப்பாகவும் புகைப்படங்கள் அமைப்பும் விளக்கமும் மிகவும் நன்றாக இருந்தது.

14. திரு. கே. தனசேகர் 25 பொன்னியம்மன் கோயில் தெரு, அடையாறு.

களிப்புற வந்த இடத்தில் மன அமைதி தந்த அரங்கம், வாழ்த்துக்கள்.

15. திரு. பி. மாரியப்பன், பெங்களூர்.

காட்சிகள் அனைத்தும் அருமை.

16. சண்முகம், அம்மை அப்பன் தெரு சென்னை-2.

வர்ணனைகள் மிகவும் சிறப்பாக இருந்தன.

17. திரு. நாகரெத்தினம், 1 கோவிந்த தெரு தரமணி.

அறநிலையத்துறை சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளது. மணி சத்தம் கோயிலை தரிசித்த மாதிரி இருந்தது. அடுத்த முறை தஞ்சையிலுள்ள கோயில்களின் சிற்பங்களை எல்லோரும் பார்க்க சிறப்பாக அமைத்தால் பார்க்க முடியாதவர்கள் இதை பார்த்துச் செல்வார்கள்.

18. திரு. என். சீனிவாசன் 8பி, பிள்ளையார் கோயில் தெரு. சென்னை-40.

மக்களுக்குக் கோயிலை அறிமுகப்படுத்தும் ஓர் அற்புதக் காட்சி.

19. திருமதி கமலா பாண்டுரங்கன், ஆற்காடு.

இந்து சமயத்தின் கருத்துக்கள் மறைந்துவரும் இக்கால கட்டத்தில் இவைபோன்ற அரங்கு தரும் பயனகள் ஏராளம்.



20. திரு. ஆர். சண்முக சுந்தரம் 2 சிவன் கோயில் தெரு, சென்னை-50.

பல ஆலயங்களை ஒருங்கே கண்டு தெய்வ தரிசனம் காணவைத்தமைக்கு மிக்க நன்றி.

21. திரு. எஸ். பிரகாஷ், 3 காமராஜ தெரு மதியழகன் நகர், சென்னை-93.

இதன் மூலம் செல்ல முடியாத இடங்களையும் நேரில் காண முடிகிறது.

22. எஸ். விஜய லட்சுமி, 14 இளையாழ்வார் கோயில் தெரு, சைதாப்பேட்டை சென்னை-

இந்து அறநிலையத்துறை அரங்கில் அமைந்துள்ள ஒவ்வொன்றும் மிகவும் பாராட்டத்தக்க வகையில் அமைந்துள்ளன. எல்லாத் திருத்தலங்களுக்கும் சென்ற திருப்தி.

23. திரு. கே. கிருஷ்ணன், சென்னை—11,

சென்னையில் இயந்திர வாழ்க்கையில் இறைவனை நினைய அவன் நினைப்பை கொடுத்தது இந்த அமைப்பு. நன்றி.

24. திரு. வேணுஇராசநாராயணன், செயலர் ஸ்ரீவைணவமகா சங்கம்; அண்ணாநகர், சென்னை-40.

ஸ்ரீ ராமானுஜர் திருப்பாணாழ்வார் நிகழ்ச்சிகளை வைத்துள்ளீர்கள். நன்றாக உள்ளது.

25. திரு. எஸ். வெங்கட்ராமன், 9[5 பாலாஜி சிங் தெரு, சென்னை-15.

தமிழ்நாட்டிலுள்ள எல்லா கோயில்களை பற்றியும், தங்கும் வசதி, பயண வசதி பற்றியும் தமிழில் புத்தகம், வெளியிடு மாறு (தள்ளுபடி விலையில்) கேட்டுக் கொள்கிறேன்.

26. திரு. ஜெ. பாலகிருஷ்ணன், 97 விக்டோரியா, மாணவர் இல்லம் திருவல்லிக்கேணி

கடந்த மூன்று ஆண்டுகளைக் காட்டிலும் மிகவும் சிறப்பாக இருந்தது. உண்மையான தெய்வீகச் சூழலை ஏற்படுத்தியது நன்றி.

27. திரு. ஏ. ராமசாமி, 1 திருவள்ளுவர் தெரு, ஆதம்பாக்கம்.

இந்த ஒரு ஸ்டாலுக்காகவேதான் நான் வருடா வருடம் வருகின்றேன். திருப்பாவை புத்தகம் பிரசாதம் கொடுக்க ஏற்பாடு செய்த அதிகாரிகளுக்கு மிக்க நன்றி. பூஜை இசைக்கருவி மிக மிக அற்புதம்.

28. திரு. சி. மகேந்திரன் 2, யுனைடெட் இந்தியா நகர், சென்னை-23.

அறநிலையத்துறையினர் பொருட்காட்சியில் வைத்துள்ள ஸ்டால் மிகவும் அழகாகவும் அற்புதமாகவும் இந்துக்கள் மனமகிழும்படியும் இருந்தது. இதனால் கலைஞர்அவர்களை மிகவும் பாராட்டுகிறேன். ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற அறிஞர் அண்ணாவின் தம்பியே நீ வாழ்க.

29. திரு. அண்ணாமலை, 128. ஜோன்ஸ் தெரு, சென்னை-15.

மணிவாசகர் வரவாற்றால் புகழ் பெற்ற ஆவுடையார் கோயில் இல்லாதது பெருங் குறை.

30. திரு. மா. ரங்கநாதன், வழக்கறிஞர், மகாத்மா காந்தி ஆசிரமம் ஆனைமலை

பக்திநெறி மனத்தைக்கொள்ளைக் கொள்ளும்படி மிகவும் சிறப்பாக அரங்கம் அமைக்கப்பட்டுள்ளது. இதில் பணியாற்றிய சிற்பிகள் ஓவியர் ஏனையோர் பாராட்டிற்கு உரியவர். மிகவும்மனமாரப் பாராட்டுகிறேன்.

31. திரு. ஆர். எஸ். ஓய்வு பெற்ற ஆசிரியர் 64, பெரியசாமி தெரு, குடநாடு, மயிலாடுதுறை.

திருக்கோயில்கள் யாகசாலைகள் அமைப்பு மற்றும் திருத்தேர், வாகனங்கள் என் மனதைப் பெரிதும் கவர்ந்தது.

32. திரு. செய்யது, 8[50 மேலத் தெரு கீழக்கரை.

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற பணி வளர இந்து அறநிலையத்துறை ஆற்றுகிற பணி பாராட்டுக்குரியது.



33. திரு. சசி பாஸ்கர், கிழக்கு தாம்பரம் சென்னை-59.

ஏற்றமிகு எழில் கொண்ட தமிழ்நாடு. பெருமைபட நாம் காணத் தீவுத்திடலில் அமைக்கப்பட்டுள்ளது இந்து அறநிலையத் துறை அரங்கம்.

34. திரு. எஸ். கிருஷ்ணசாமி, 22 டாக்டர் சுப்பராயநகர் மெயின் ரோடு, கோடம்பாக்கம்.

தேவார பாடல்பெற்ற இடங்கள் ஆழ்வார்கள் பாடல் பெற்ற இடங்கள் முதலியவற்றின் தகவல்களை சிறு பதிப்பாக வெளியிட்டால் அவற்றுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும்.

35. திரு. எம். செல்லையா, 13 மேட்டு தெரு அயனாபுரம், சென்னை-23.

ரொம்ப பயன் உள்ளதாக உள்ளது.

36. திரு. எஸ். தேவராஜ், அறநிலையத்துறை சென்னை-34.

இந்து சமய வரலாறு குழந்தைகளும் அறியும் வண்ணம் அழகாக அமைத்த இந்து சமய அறநிலையத்துறைக்கு நன்றி

37. திரு. ராமநாதன், திருத்தணி.

அரங்கம் அனைத்து வயதினரை கவரும் வண்ணம் அருமையாக உள்ளது.



# கவிக்கூத்தர் வெண்கலிப்பா

கவிஞர் ப. விஜயன்

ஈவந்து மொய்த்தாலும் எச்சிற்கை அசைக்காத
பாவத்தின் உருபோன்ற பரமகஞ்ச னைக்கூட
'ஐயனிவன் குபேரனுக்கும் அளித்திட்டான் 'பிச்சை'யென்றே
பொய்சேர்த்துப் புனைந்துரைக்கும் புளுகாளர் மத்தியிலே
மெய்ம்மையே ஏத்தியவர் மெய்ஞ்ஞானக் கதையெல்லாம்
பொய்ச்செருகல் ஏதுமின்றிப் பூந்தமிழில் பாடியவர்;
எலிமுன்னே வந்தாலோ என்பொடுங்கி நடுநடுங்கிக்
கிலிகொள்ளும் பேதையராம் கீழான மாந்தரையும்
'போர்க்களத்துப் புலி'யென்றே புனைந்தேத்தும் புலவர்களை
ஆர்ப்பரித்துச் செருக்கழிக்க அஞ்சாத செங்குந்தர்;
கண்ணெடுத்தும் பார்க்கவொணாக் கரியபன்றி அன்னாரை
மன்மதனின் வாரிசென மனங்கூசா(து) உரைப்போரை
வில்லெடுத்துப்பகைவீழ்த்தும் விசயனைப்போல் கவிதையிலே
சொல்லெடுத்துப் போர்தொடுத்த சொர்ண கவிக் கூத்தரவர்
இனிமைமிகு தமிழாலேஇறைபெருமைபாடிட்ட
பனிரெண்டாம் நுற்றாண்டின் பண்பாளர் பெரும்புலவர்
சிவநெறியை எப்போதும் சிந்தித்த பெருமகனார்
தவவாழ்வாய்க் கவிப்பணியைத் தாமேற்று நடத்தியவர்
அக்கவிஞர் யாரெனினோ அந்தாதி உலாக் கோவை
தக்கயாகப் பரணிமற்றும் தனிநூல்கள் தண்டமிழில்
நயத்தோடு பாடிவைத்த நம்ஒட்டக் கூத்தரேதான்.
மூயல்கின்றேன்-அவர்புகழை மொழிந்திட வெண்கலிப்பாவில்.
புரவலரில் மன்னர்களில் புலியன்ன வீரரென்றே
வரலாற்றில் பலருண்டு; வல்லவராய் திகழ்ந்ததுண்டு;
புலவர்களில் அதுபோன்று புலிகளாக எத்தனைபேர்?
சிலர்தாமே கவிப்புலிகள் சீர்ஒட்டக் கூத்தரைப் போல்.
பஞ்சந்தான் பெரும்பாலும் பாடிவரும் புலவரிடம்
தஞ்சமென இருப்பதுண்டு; தரணியிலே இது வியற்கை
விதியான இவ்வியற்கை விளையாட முடியாமல்
துதிசொல்லிப் போனதுண்மை சொர்ணகவிக் கூத்தரிடம்
திருமகளின் கலைமகளின் திருநோக்கு சேர்ந்திடவே
பெரும்பொருளும் அருட்கவியும் பெற்றோங்கி வாழ்ந்திட்டார்
காசாசை இல்லாமல் கடையருக்கும் கொடையளித்தார்.



ஆசானாய் சபைவீற்றே அரசருக்கும்
கற்பித்தார்.
கூத்தரது 'மூவருலா' குன்றிலிட்ட மணிவிளக்கு.
பார்த்தறிந்து சுவைப்பதற்குப் பாங்கான
கவிவிளக்கு
எழுபருவப் பெண்பாலார் இதயநிலை
சொலும்போதும்
பழுதில்லா உவமைகளைப் பக்குவமாய்ப்
பதிக்கின்றார்;
காமத்தைத் தூண்டாமல் காதலினை
விரிக்கின்றார்
காமத்தீ விளைக்காமல் கனவுநிலை உரைக்
கின்றார்
பெண்பாலர்ப் பேரழகைப் பேசுகின்ற உலாப்
போழ்தும்
பண்புகுன்றிப் பாடாத பாங்குகவிப் பேரரசர்;
நல்லொழுக்கம் என்கின்ற நற்பண்பைக்
கொண்டதால்தான்
நல்லநூல்கள் படைத்திட்டார் நம்கூத்தர்
இயல்பாக
தனித்தபெரும் சைவநெறி தழைத்தோங்கும்
வகைசெய்யக்
கனிஞான சம்பந்தர் காழியிலே உதித்ததுபோல்
சிவன்பெருமை வரலாற்றைச் செந்தமிழில்
பாடிடவே
சிவஞானக் கடாக்களிறாய்த் தேன்ஒட்டக்
கூத்தருமே
சீர்மலரி ஊருதித்தார் செந்தமிழர்
தவப்பயனால்;
பார்புகழப் பாடிவைத்தார் பரமனின்சீர்
வரலாற்றை.
பக்குவமாய்க் கதைவிரித்துப் பரமசிவன்
வல்லமையைத்
தக்கயாகப் பரணியிலே சாற்றுகின்றார்
அற்புதமாய்;
கடைதிறப்பு பாடுபோழ்தும் கடவுளைத்தான்
எண்ணுகின்றார்
மடைதிறந்த வெள்ளமென மகேசனைத்தான்
போற்றுகின்றார்
பேய்முறைப்பா(டு) உரைக்கையிலும் பேய்
வாதம் சொல்கையிலும்
தூய்மைமணம் கமழுவண்ணம் துதிக்கின்றார்
அரனைத்தான்.
வரம்புக்குள்நின்றபடிவரலாற்றைத்தந்திட்டார்
அரனார்தம் பெருமையெலாம் அகங்குளிர
உரைத்திட்டார்.
பவித்திரமாம் தெய்வமணம் பாக்களிலே
பவனிவரக்
கவியளிக்கும் பேரரசர் கவித்திறத்தை
வியக்கின்றோம்.
புன்னெறியைக் கற்பித்த புலவர்களைப்
புறத்தள்ளி
நன்னெறிசொல் கூத்தர்நூல் நானிலத்தும்
படிப்பிப்போம்;
புலியொட்டக் கூத்தரினைப் புவியெல்லாம்
அறிந்திடவே
சிலிர்த்தெழுந்து புறப்படுவோம் சீர்பாடி
விழாச்செய்வோம்.
அகிலமெலாம் கூத்தரின்நூல் அனுபவித்துக்
களித்திடவே
முகிலெனயாம் இவர்படைப்பை முதுகேந்தி
மழைபொழிவோம்.
சாற்றுகவி போற்றுகின்ற சான்றோர்தம்
வழி நடந்தே
போற்றிடுவோம் கூத்தர் புகழ்.



# அரியும் சிவனும் ஒண்ணு

பேராசிரியர் டாக்டர் டி. செல்வராஜ்

''அரியும் சிவனும் ஒண்ணு; அறியாதவர் வாயில் மண்ணு'' என்ற பழமொழி பல நூற்றாண்டுகளாக வழங்கி வருகின்றது. உண்மை தான், அவர்கள் இருவரும் ஒருவர்தான். கம்பரும் 'அரன் அதிகன் அரி அதிகன் என்றுரைக்கும் அறிவிலோர்க்குப் பரகதி சென்றடைவது அரிதே.' என்று இருபெரும் தெய்வங்களுக்கிடையில் வேறுபாடுகளைக் கற்பிக்கக்கூடாது என ஆணையிடுகின்றார்.

அரியையும் சிவனையும்-இருவர் சிறப்பும் தனித்தனியே மேலோங்க வழிபட்டனர். இருவரையும் ஒருங்கே இணைத்தும் வழிபட்டனர். இணைத்து வழிபட்ட முறைகள் பற்பல; இடச் சுருக்கம் கருதிச் சிற்சில முக்கியமான வழிபாட்டு முறைகளை இனித் தரிசிக்கலாம்.

**1. சங்கர நாராயணர் வடிவம் :**

இந்து சமயத்தில் தெய்வ வடிவங்களை மூன்று வகைப்படுத்தலாம்.

1. ஒரு தெய்வ வடிவம்-உதாரணம் சிவன் : முருகன்; விஷ்ணு. இறைவன் தன் தேவிகளுடனும் குடும்பத்துடனும் விளங்கும் வடிவங்களையும் இதே வகையில் அடக்கிக் கொள்ளலாம்.

2. இரட்டை வடிவக்கூறுகள் இணைந்த வடிவங்கள். இந்த வடிவங்களை இரண்டு வகைப்படுத்தலாம்.

(அ) உடல் ஒரு கூறு; தலை ஒரு கூறு என்று இவ்வாறுவேறுபட்ட கூறுகள் கீழ் மேலாக இணைந்த வடிவங்கள். உதாரணம்; அயக்கிரீவர்; வராகமூர்த்தி; நரசிங்கம்.

(ஆ) இடப்பாதி ஒரு கூறு, வலப்பாதி ஒரு கூறு என்று. இரட்டை வடிவங்கள் ஒரே வடிவமாக இணைந்த வடிவங்கள் உதாரணம் அம்மையப்பர்; சங்கரநாராயணர்; ஆதியந்தப் பிரபு.

3. பல கூறுகள் பலவாறு கலந்த வடிவங்கள். உதாரணம்; விநாயகர்; காமதேனு; தத்தாத்ரேயர்;

ஒவ்வொரு தெய்வத்திற்கும் தனித்தனி சக்தி உண்டு. படைப்பவன் பிரமன்; காப்பவன் விஷ்ணு; அழிப்பவன் ருத்திரன். பற்பல சக்திகள், வரம்பற்ற சக்திகள். சிற்சில தெய்வங்களுக்கு உரியன என்று தெரிவிக்க இரட்டை வடிவத் தெய்வங்களும் கலவை வடிவத் தெய்வங்களும் அமைக்கப்பட்டுள்ளனர். சங்கர நாராயணார் வடிவமும் இத்தகையதே. பரம் பொருளின் இரட்டை வடிவங்கள். ஒன்றாக இணைந்து அருள்பாலிக்கின்றன.

அம்மையப்பர் வடிவத்தைத் 'தொன்மைக் கோலம்' என்றும் 'முதல் உரு' என்றும் சான்றோர்கள் போற்றுகின்றனர். அடுத்து, வலப்பக்கத்தில் செந் நிறம் கொண்ட, மழுப்படையை ஒரு கரத்தில் ஏந்தி, அபய கரத்துடன் விளங்கும் சிவனும், இடப்பக்கத்தில் நீலநிறம் கொண்ட, சக்கரப் படையை ஒரு கரத்தில் ஏந்தி, வரத கரத்துடன் விஷ்ணுவும், சரிபாதியாக இணைந்து திகழ்வதே சங்கர நாராயணர் அல்லது கேசவ அர்த்தர் வடிவம்.

சங்கர நாராயணர் வடிவத்தை முதன் முதல் அகநானூறு வருணிக்கின்றது. 'சிவப்பு நிறச் சிவனும் நீல நிற நாராயணனும் ஒரே வடிவாய் இணைந்து தோற்றமளிப்பதைப் போல, அந்திச் செவ்வானமும் நீலக்கடலும் அழகுறப் பொலிகின்றன 'என்று அந்நூல் புனைந்துரைக்கின்றது.

அடுத்துக் காரைக்காலம்மையார்,

'ஒருபால் உலகளந்த மாலவனாம்; மற்றை
ஒருபால் உமையவளாம்'

என்று சங்கரநாராயணர், அம்மையப்பர் வடிவங்களை வருணிப்பதுடன், திரிவிக்கிரமனையும் 'உலகளந்த' என்ற தொடரால் குறிப்பிடுகின்றார்.

ஆழ்வார்களில் பொய்கையாழ்வாரும், பூதத்தாழ்வாரும், பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும் சங்கர நாராயணர் வடிவத்தைப் புகழ்ந்து பாடினர். பேயாழ்வார் பாடிய பாசுரம் வருமாறு:

'தாழ்சடையும் நீள்முடியும், ஒண்மழுவும்
சக்கரமும்,
சூழரவும் பொன்நாணும் தோன்றுமால்-சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து'

சங்கர நாராயணர் வடிவத்தைச் சிவனடியார்களும் வைணவ ஆழ்வார்களும் ஏற்றுக்கொண்டு. அவ்வடிவ அழகுகளை வருணித்து மகிழ்ந்தனர்; வழிபட்டனர்.

**2 இரட்டைச் சன்னிதிகள் :**

திருமெய்யம் : பல்லவன் மகேந்திரனின் முன்னோர்கள் பலர் வைணவச் சமயத்தைச் சார்ந்தவர்கள். மகேந்திரன் சமணனாக இருந்து பின்னர்ச் சைவனாக மாறினான். இவன் திருமெய்யத்தில் சிவனுக்கு ஒரு குடைவரைக் கோயில் எடுத்தான். இவன் மகன் நரசிம்மன் குடைவரைக்குப் பக்கத்தில் விஷ்ணுவின் சயனத்திருமேனிக் கோலத்தை வடித்தான். இந்திய நாட்டில் சயனத்திருமேனிகளில் இதுவே மிகப் பெரிய திருமேனி. திருவரங்கத்திற்கு முன் சிறப்படைந்த இத்தலத்தை 'ஆதிரங்கம்' என்று வழங்குகின்றனர். சிவ விஷ்ணுவின் குடைவரைகள் பெரிய கோட்டைக்குள்ளேயே அமைந்துள்ளன. இந்த அமைப்பு சிவவிஷ்ணு வழிபாட்டிற்கு மிகச் சிறந்த தோற்றுவாய்; முன்னோடியாம். தொடர்ந்து ஒரே கோயிலில் இரட்டைச் சன்னிதிகளை நிறுவி, இருவரையும் ஒருங்கே வழிபட முனைந்தனர்.

தமிழ்நாட்டில் சிவன் கோயில்களில் விஷ்ணு சன்னிதியும் உள்ள பழைய கோயில்கள் மொத்தம் பன்னிரண்டு என்பர். சிக்கல். நெல்லை முதலியன அவற்றுள் சில.

நெல்லை மாவட்டம் திருப்போத்துடையார் கோயிலில் சிவனும் விஷ்ணுவும் எதிரெதிர் நின்று தரிசனம் தருகின்றனர்.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் நின்று சிவனையும் விஷ்ணுவையும் தரிசிக்கும்படி அமைந்த இரட்டைச் சன்னிதிகள் சிதம்பரத்திலும் ஈரோட்டிலும் விளங்குகின்றன.



மேற்கண்ட அனைத்துக் கோயில்களும் 'அரியும் சிவனும் ஒண்ணு' என்று நிலை நாட்டுகின்றன.

ஒரே கோயிலின் இரட்டைச் சன்னிதிகளில் சிவனும், விஷ்ணுவும் வீற்றிருந்து அருள் தருகின்றனர்.

**3. சங்கரன் கோயில் :**

நெல்லை மாவட்டத்தில் சங்கரன் கோயிலில் 'சங்கர நாராயணர்' வடிவம் உள்ளது. இந்தப் பழைய கோயிலைக் கட்டியவன் உக்கிர பாண்டியன்.

சங்கரன், பதுமன் என்ற நாகர்கள் இருவரில் சங்கரன் சிவபக்தன். பதுமன் விஷ்ணு பக்தன். சிவன் பெரியவனா? விஷ்ணு பெரியவனா?! என்று இருவரும் வாதம் செய்வது வழக்கம். இந்த வாதத்தைக் கேட்ட கோமதி அம்மையாரே மயங்கி இதுபற்றி இறைவனை வினவினாளாம் இறைவன் அம்மையைப் புன்னை வனத்தில் தவம் செய்யும்படி அருளினாராம். தவமிருந்த அம்மையின் திருமுன் இறைவனே 'சங்கரநாராயணராகக் காட்சி தந்து 'அரியும் சிவனும் ஒண்ணு' என்ற தத்துவத்தை அனைவருக்கும் புலப்படுத்தினார். ஆடித்தவசு திருவிழா மேற்கண்ட வைபவத்தைக் காட்டுகிறது.



சிவவிஷ்ணு வழிபாட்டு வரலாற்றில் சங்கரன் கோயிலுக்குத் தனிச் சிறப்பிடம் எப்போதும் உண்டு. 'சங்கர நாராயணர்' என்ற மிகப்பழைய வடிவத்திற்குத் தனிக் கோயில் கட்டப்பட்டது ஒரு சிறப்பு.

### 4. ஊரின் இருபக்கம் :

மன்னர்கள் தலைநகரிலும் அவர்கள் தங்கிய நகர்களிலும் ஊர்களிலும் புதிதாக உருவாக்கப்பட்ட ஊர்களிலும் சிவன் கோயில்களையும் விஷ்ணு கோயில்களையும் கட்டினார்கள். அவர்கள் தொடங்கி வைத்த திருப்பணிகள் தொடர்ந்து நடைபெறுகின்றன. ஒரு கண்ணோட்டமாக சிவ விஷ்ணு வழிபாட்டில் காஞ்சிபுரம் பெறும் இடத்தைக் காணலாம்.

காஞ்சிபுரத்தில் சிவ காஞ்சி, விஷ்ணு காஞ்சி என்ற இருபெரும் பகுதிகள் இப்போதும் உள்ளன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சைவ சமயச் சார்புடைய 108 கோயில்களும் வைணவச் சார்புடைய 80 கோயில்களும் இருந்தன. இவற்றுள் எழுபதுக்கு மேற்பட்ட கோயில்களில் பூசைகளும் வழிபாடுகளும் தொடர்ந்து நடைபெறுகின்றன. தமிழகத்துப் பிற நகரங்களை ஒப்பிடும்போது காஞ்சிபுரத்தின் நகர எல்லை சிறியது ஆனால் கோயில்களின் எண்ணிக்கை அதிகம். இங்கு வாய்ப்பும் தேவையும் இருக்கும் சிறப்பான இடங்களில் கோயில்கள் கட்டப்பட்டன.

ஊரின் வடகிழக்கு மூலையில் சிவன்கோயிலும், தென்மேற்கு மூலையில் விஷ்ணு கோயிலும் கட்டப்பட்டன எனலாம். ஸ்ரீ வைகுண்டம் ஆழ்வார் திருநகரி, திருப்பேரை, பெருங்குளம் முதலான திருத்தலங்களில் இத்திசைஅமைப்பு இருப்பது உற்றுக் கவனிக்கத்தக்கது. ஊர்களின் எல்லைகள் பெருகப் பெருக, பற்பல திசைகளில் சிவன் கோயில்களும், விஷ்ணு கோயில்களும் பலவாறு பெருகின.

### 5. சிற்றூரின் இருபக்கம் :

தெருவின் அல்லது சிற்றூரின், ஒரு பக்கம் அரியின் கோயிலும் மறுபக்கம் அரன் கோயிலும் அமைக்கப்படுவது பழங்கால மற்றொரு மரபு. 'அரிஅரன்' என்ற பெயர்கள், 'அர ஆரம்' என்றும், பின்னர் 'அக்ர ஆரம்' என்றும் மாறின என்று ஒரு கருத்து உண்டு. 'அக்ரகாரம்' இப்போது 'அகரம்' என்றும் வழங்குகின்றது. இக்கருத்தின்படி, 'அக்ர ஆரம்' என்பது அரி. அரன் கோயில்களை இருபக்க எல்லைகளாகக் கொண்டது என்பது தெரிகிறது.

### 6. இரண்டு மண்டபங்கள் :

முன்னர் விழாக்காலங்களில், விஷ்ணுக் கோயில்களில் சிவன் எழுந்தருளவும் சிவன் கோயில்களில் விஷ்ணு எழுந்தருளவும் தனித்தனி மண்டபங்கள் இருந்தன. திருவானைக்கா கோயிலில், சிவபார்வதி திருமணத்தின்போது தாரை வார்த்துத் தருவதற்குத் திருவரங்கத்திலிருந்து திருவரங்கர் எழுந்தருளி வந்து தங்குவதற்கு ஒரு மண்டபம் இருந்தது. இதேபோல சம்புநாதர் வந்து எழுந்தருளுவதற்காகத் திருவரங்கக்கோயில் புட்கரணியில் ஒரு மண்டபம் இருந்தது. அப்போது சமய வேறுபாடுகளைச் சற்றும் கருதாமல் இரு சமயத்தாரும் இரு தெய்வங்களைச் சிறப்பாக வரவேற்று வழிபட்டனர்.

7. **மும்மூர்த்தி வழிபாடு : சிவ விஷ்ணு** வழிபாடு மும்மூர்த்தி வழிபாட்டில் அடக்கம். மும்மூர்த்திகளை விட உயர்ந்த பரம்பொருள் சிவன் என்று சைவர் கூறுவர். ஸ்ரீமந் நாராயணனே உயர்ந்தவன் என்று வைணவர் கூறுவர்.

சுசீந்திரம் திருக்கண்டியூர் திருக்கரம்பனூர் முதலிய மிகச் சில தலங்களில் மும்மூர்த்தி வழிபாடு இப்போதும் உண்டு.

சில பொருள்களில் மும்மூர்த்திகளும் உறைவதாகக் கொள்கின்றனர். லிங்கத்தின் அடிப்பாகம் பிரமனுக்கும் இடைப்பாகம் விஷ்ணுவுக்கும், மேல் பாகம் சிவனுக்கும் உரியன. அரச மரத்திலும் மும்மூர்த்திகள் வாசம் செய்கின்றனர். ஆகவே அரச மரம் புனிதமானது. பழங்களில் மொந்தன் பழம் பிரமனுக்கும் பூவன் பழம் விஷ்ணுவுக்கும், பேயன் பழம் சிவனுக்கும் உரியன. மும்மூர்த்திகள் எப்போதும் நிகரானவர்கள்.

ஒரே பரம்பொருள் மும்மூர்த்திகளாகத் தோன்றி, முத்தொழில்களைச் செயல்படுத்துகின்றது என்று இரு சமயங்களும் பொதுவாகவே கருதுகின்றன.

சிவனின் தங்கையான சரஸ்வதியை மணந்தவன் பிரமன். பிரமனின் தங்கையான மகாலட்சுமியை மணந்தவன் விஷ்ணு. விஷ்ணுவின் தங்கையான பார்வதியை மணந்தவன் சிவன். மூவரும் உறவினர்.

8. **கோட்ட தெய்வங்கள் :**

சிவன் கோயிலின் கோஷ்டங்களிலும் திருச்சுற்றுகளிலும் விஷ்ணுவின் மூர்த்தங்கள் பல காணப்படுகின்றன. மாறாக, நடராசர்முதலிய மிகச் சில சிவ மூர்த்தங்கள் விஷ்ணு கோயில்களில் இருப்பதுண்டு. இவையும் திருச்சுற்றுகளில் அமைந்திருப்பது மிக அபூர்வம்.

9. **கிடந்த கோலம் :**

கிடந்த கோலத்தில் விஷ்ணுவை வழிபட்டவர்கள் வைணவர்கள். இதே திருக்கோலத்தில் சிவனையும் வழிபடப் பக்தர்கள் விரும்பினார்கள்; அவ்வாறே அமைத்தும் வழிபட்டார்கள். ஊத்துக்கோட்டைக்கு அருகிலுள்ள சுருட்டப்பள்ளி என்ற ஊரின் கோயிலில் சிவன் கிடந்த கோலத்தில் தரிசனம் தருகின்றார். இத்தகைய வடிவம் வேறுஎங்கும் இல்லை. கிடந்த கோலம் விஷ்ணுவுக்குரியது; வடிவம் சிவனுக்குரியது. இருபெரும் தெய்வங்களை இம்முறையிலும் ஒருவராகவே கருதி பக்தர்கள் வழிபட்டனர்.

10. **இரு சமயச் சின்னங்கள் :**

சைவ சமயச் சின்னம் திருநீறு; வைணவ சமயச் சின்னம் திருநாமம். திருநீறும், திருநாமமும் திருமண்ணின் இருவேறு வடிவங்களே. உலகப் பொருள்கள் அனைத்தும் முடிவில் மண்ணாய்ப் போகும் என்ற நிலையாமைத்



தத்துவத்தை உணர்த்தும் பொருள்களே. இரு சமயத்தாரும் இருசமயச் சின்னங்களைப் பொதுவாகவே போற்றுகின்றார்கள். இவை இரண்டையும் நெற்றியில் தரித்த பிள்ளையார் திருவரங்கப் பெருங்கோயிலில் திருக்காட்சி யளிக்கின்றார். இவரது திருக்காட்சி சிவ விஷ்ணு வழிபாட்டிற்கும், சைவ வைணவ சமயங்களின் இணக்கத்திற்கும் ஒரு நல்ல 'பிள்ளையார் சுழி.'

மதுரை அழகர் கோயிலில் கருப்பண்ண சாமி என்ற காவல் தெய்வம் வீற்றிருக்கும் கோபுர வாசல் திறக்கப்படுவதில்லை. பக்தர்கள் கருப்பண்ண சாமியை முதலில் வழிபட்டு, வேறு கோபுர வாசலின் வழியாகக் கோயிலுக்குள் நுழைகின்றனர். ஆடி மாதத்தில், ஒரு நாள் அந்த வாசல் திறக்கப்படுகின்ற போது, அன்று மட்டும். திருநீற்றுப் பிரசாதம் வழங்கப்படுகின்றது.

நம்மாழ்வார் 'கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும் பெரிய கோலத் தடங்கண்ணன்' (3056) என்று திருமண்ணைத்திருநீறு என்று குறிப்பிடுகின்றார். நீறு-திருமண் என்பது ஒரு பொருள்.' கண்ணன்-விஷ்ணு, திருநீறு சிறிதேயிடும் சிவபக்தன்' என்பது மற்றொரு பொருள். விஷ்ணு ஒரு சிவபக்தனாவார்.



11. இரு பெரும் பக்தர்கள் :

ஆம்; விஷ்ணு ஒரு சிவபக்தன்தான்.

திருவீழிமிழலை : விஷ்ணு சக்கரம் வேண்டி சிவனை வழிபட்ட தலம் இது. அவன் மலர்களைக் கொண்டு வழிபடும்போது, ஒரு நாள் எண்ணிக்கையில் ஒரு மலர் குறைந்தது. உடனே ஒரு கண்மலரைத் தோண்டிச்சாத்திச் சக்கரத்தைப் பெற்றான். தல இறைவன் நேத்திர அர்ப்பணேசுவரர்

சிவன் ஒரு விஷ்ணு பக்தனா! ஆம் விஷ்ணு பக்தன்தான்.

திருக்கண்டியூர்: சிவன் பிரமனின் ஒரு தலையைக் கிள்ளினான். அப்போது தலை அவன் கையிலேயே ஒட்டிக்கொண்டது. சாபப் பரிகாரமாகச் சிவன் விஷ்ணுவை வழிபட விஷ்ணுவும் சாப விமோசனம் அளித்த தலம் இது. தல இறைவன்-அரசாப விமோசனப் பெருமாள். இதே ஐதிகம் திருக்கரம்பனூரிலும் வழங்குகின்றது.

சிவன் விஷ்ணுவுக்கும் விஷ்ணு சிவனுக்கும் பரம பக்தர்களாம். பரம்பொருள்கள் இருவரும் ஒருவருக்கொருவர் பக்தராக இருப்பது அதிசயமே. இந்தத் தெய்வப் பக்தர்கள் மனித பக்தர்களுக்கு முன்னோடிகளாகவும் வழிகாட்டிகளாகவும் திகழ்ந்து பக்தியின் பரிணாமங்களை உணர்த்துகின்றார்கள். இவர்கள் பக்தர்களாக விளங்கும் தத்துவம் இதுதான். இணைப்புகளில் மிகமிகமேலானது 'குரு-சீடன்' இணைப்பு.

உறவு முறை: சிவனையும் விஷ்ணுவையும் உறவு முறையில் இணைத்து ஒருங்கே வழிபடுகின்றனர்.

அழகர். தம் தங்கை மீனாட்சியை சொக்கநாதருக்கு திருமணம் செய்து கொடுத்தார். அழகர் தாரை வார்த்து இருவருக்கும் திருமணம் நிகழ்த்தும் திருக்காட்சி மிகவும் பிரபலமானது. சில தலங்களில் இந்நிகழ்ச்சி ஒரு திருவிழாவாகவும் ஆண்டுதோறும் கொண்டாடப்படுகிறது. திருமண இணைப்பால் சொக்கநாதரின் மைத்துனர் அழகர்ஆவார்.

விஷ்ணு ஒரு முறை அசுரர்களை வதைக்க மோகினி அவதாரம் எடுத்தார். மோகினிக்கும் (அரிக்கும்) இவளை மோகித்த அரனுக்கும் பிறந்தவர் ஐயப்பன். ஆகவே ஐயப்பனுக்கு 'அரிஅர புத்திரன்' என்ற பெயரும் உண்டு. சிவனுக்கு ( அரனுக்கு) 'அரியலால் தேவியில்லை' என்றார் அப்பர் பெருமகனார். எனவே அரனின் மனைவி அரி. ஆவார். இவ்வாறு இருபெருந்தெய்வங்கள் உறவு முறைகளால் இணைக்கப்பட்டனர். பக்தர்கள் வழிபடுபோதெல்லாம் இணைந்து அருள் தரும் தெய்வ வள்ளல்கள் இவர்கள்.

துளசியும் வில்வமும் : துளசி விஷ்ணுவுக்குரியது. சிவனுக்குரியது வில்வம். மகாலட்சுமி உறையும் இடங்களில் வில்வமும் ஒன்று. வில்வ இலை அர்ச்சனை வெங்கடாசலபதிக்கும் உண்டு.

ஸ்ரீமுஷ்ணத்தில் சிவன் கோயிலின் தல விருட்சம் துளசி; பெருமாள் கோயிலின் தல விருட்சம் வில்வம். தாடிக் கொம்பு பெருமாள் கோயிலின் தலவிருட்சம் வில்வம். திருவிற்குடி வீரட்டானத்தின் தலவிருட்சம் துளசி.



துளசியும் வில்வமும் சிவ விஷ்ணு வழிபாட்டின் ஒருமைப்பாட்டையும் சைவ வைணவச் சமயங்களின் இணக்கத்தையும் புலப்படுத்துகின்றன.

விஷ்ணுலிங்கம். வடாற்காடு மாவட்டத்தில் திருப்பாற்கடல் என்ற சிற்றூரின் கோயிலில் திருப்பாற்கடல் நாதன் வடிவம் ஒன்று சிறப்பாகத் திகழ்கின்றது. லிங்கத்தின் ஆவுடையார் மீது பாணத்திற்குப் பதிலாக விஷ்ணுவின் நின்ற திருக்கோலம் உள்ளது. அரியும் சிவனும் ஒன்று என்று நிறுவ சிவலிங்கமும் விஷ்ணு வடிவமும் இணைந்த இத்தகைய அதிசய மூர்த்தம் வேறு எங்கும் இல்லை

**விஷ்ணுவின் அவதாரங்கள் :**

விஷ்ணுவின் அவதாரங்களுக்கும் சிவனுக்கும் இடையிலுள்ள தொடர்புகள் சிலவற்றை இனிக் காணலாம்.

1. **இராமன்** : இராமன் இராமேஸ்வரம் வேதாரண்யம் பட்டீசுவரம் ஆகிய மூன்று தலங்களிலும் சிவனை வழிபட்டுத்தனது தோஷங்களை நிவர்த்தி செய்து கொண்டதாகத் தல புராணங்கள் கூறுகின்றன. இராமன் வழிபட்ட லிங்கங்கள் அனைத்தும் 'இராமலிங்கம்' என்ற பெயருடன் திகழ்கின்றன. இராமன் சிவனை வழிபட்ட மற்றொரு திருத்தலம் திருக்கண்ணபுரத்திற்குக் கிழக்கேயுள்ள இராமனதீச்சுரம். இராமன் முறித்தது 'சிவ தனுசு'

2. **பரசுராமன்:** பரசுராமன் சிறந்த சிவ பக்தன். சிவனை நோக்கித் தவமிருந்தவன்; அவன் அருளிய பரசு என்ற மழுவை ஏந்தியதால் 'பரசுராமன்' ஆனான்.

3. **வராகம்:** விஷ்ணு வராக அவதாரம் எடுத்து சிவனது திருவடியைத் தரிசிக்க முயன்று பெரும்பள்ளத்தைத் தோண்டிய திருத்தலம் 'அரதைப்பெரும்பாழி' (அரித்துவார மங்கலம்). அடி முடி தேடிய விஷ்ணுவுக்கும் பிரமனுக்கும் அணுகமுடியாத ஒளிப்பிழம்பாகச் சிவன் விளங்கிய திருத்தலம் திருவண்ணாமலை.

4. **நரசிங்கம்** : விஷ்ணு நரசிங்க அவதாரம் எடுத்து இரணியனை வதம் செய்த பிறகும் அவரது உக்கிரம் தணியவில்லை. சிவன் சரபமூர்த்தியாக அவதரித்து அவரது கடுஞ்சினத்தைத் தணித்த திருத்தலம் திருபுவனம்.

5. **வாமனன்** : வாமன அவதாரம் செய்த விஷ்ணு சிவனை வழிபட்ட திருத்தலம் திருமாணிக்குழி. மாணி-வாமனன்.

6. **திரிவிக்கிரமன்** : திரிவிக்கிரமன் விண்ணை அளக்கக்காலை உயர்த்தியபோது தேவர்கள் செய்த பாத அபிஷேக நீரே சிவனின் திருமுடியிலிருந்து கங்கை நீராக வழிகின்றதாம்.

'அரியும் சிவனும் ஒண்ணு' என்ற கருத்துக்கு ஆதாரமாக மேலும் சில குறிப்புகளைச் சுருக்கமாகத் தொகுத்து அறியலாம்.

1. சிவதனுசும் விஷ்ணுதனுசும் உள்ளன.

2. இருபத்தேழு நட்சத்திரங்களில் சிவனுக்குரிய 'திருவாதிரையும் விஷ்ணுவுக்குரிய திருவோணமும்' ஆகிய இரண்டு நட்சத்திரங்கள் மட்டும் 'திரு' என்ற சிறப்பு அடைமொழியைப் பெற்றுள்ளன.

3. சிவனும் விஷ்ணுவும் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் உதவிக்கொள்கின்றனர். உதாரணமாக சிவன் திரிபுரம் எரித்தபோது, அம்பாகப் பயன்பட்டவர் விஷ்ணு.

4. குமரி மாவட்டத்தில் மகா சிவராத்திரியைச் சார்ந்து பன்னிரு சிவாலயத்திரு ஓட்டப் பயணத்தில் பங்கு கொள்கின்ற பக்தர்கள் அனைவரும் பயணத்தின்போது 'கோவிந்தா! கோபாலா' என்று அழைத்தபடியே அந்தச் சிவாலயங்களுக்குச் சென்று சிவனைத் தரிசிக்கின்றனர்.

உமையொருபாகர் சங்கர நாரயணர் வடிவங்களில் வலப்பாகம் சிவனுக்குரியது. இடப்பாகத்துக்கு உரியவர்கள் உமை, நாராயணன் ஆவர். எனவே பராசக்தியின் வடிவமே நாராயணன் எனலாம். இந்தக் கருத்தை விளக்கும் ஸ்ரீகாஞ்சிப் பெரியவர் அவர்களின் அருளுரை இக்கட்டுரையின் முடிவுரை:

'பராசக்தியின் மற்றொரு உருவமே திருமால்.
பராசக்தியை விட்டுப்பிரிக்க முடியாத
ஆதாரப் பொருளே சிவன்.''
'அரனை மறவேல்.''
'திருமாலுக்கடிமை செய்'—ஆத்திசூடி.

---

தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள்

அருளிய

# தண்டபாணிப் பதிகம்



சீதமது மிகமருவும் கமலமல ரொப்பச்
சிறந்தநின் திருவடிகளும்
செய்யவரை தன்னினிய துய்யவொளி
யெய்திஎழில்
செய்யுமொரு கௌபீனமும்

ஓதரும றிவுரைசெய் வலக்கரத் துப்பூமி
ஊன்றிநிற்கும் தண்டமும்
உள்ளமகிழ் கொள்ளவோர் பிள்ளையென
வேமருங்
கோடங்கி லங்கு கையும்

போதமொரு நொடிதந்து ஜனனவினை
நீக்கும்வி
பூதியபி சேகமுகமும்
பூண்டதாய் வருவுத்தி ராட்சமும் கண்டுநான்
போற்றநீ என்றுவருவாய்!

தாதளவி வரியளிகள் மதுவுண்டு பண்பாடும்
தண்டலைப் பழனிமலையில்
தமிழ்முனிவ னருணகிரி பணியவருள் புரியு
மொரு
தண்டபாணித் தெய்வமே! 1

கலகமுனி பழமொன்று கொண்டுவந் தன்றுமுக்
கண்ணனிட மேகொடுக்கக்
கண்டுசூ தப்பழம தென்றுமறி யாமலே
கஜானன்வி டான்என

மெலவழைத் துலகைமுன் வலம்வரு வரிப்பழமு
மேகொண்மினென்ற மொழியை
மெய்யாகு மென்றுதோ கையேறி யுலகெலாம்
விரைவிலே யுலவியருகில்

இலகுமுன் கரவகர வுகரமொடு மகரமுக
னெழுந்துற்றிடுந் தந்தைதாய்
இருவரையு மேகற்றி வந்துவந் தித்து அவ்
வின்பப்ப ழம் பெற்றதால்

தலமெவற்றி லுமதிக மகிமையிதுவெனவுமுயர்
தருமநிறை பழனிமலை யில்
தந்தைகனி ஈயவிலை யென்றுதனி யாகவரு
தண்டபாணித் தெய்வமே. 2

ஒருகனி நீ தரவில்லை யாயினும் என்றனக்
குலகுதனில் கனியின்வகைகள்
உள்ளவெல் லாமுரித் தொன்றாய்த்
திரட்டியுடன்
உயர்ந்த கற்கண்டுமுதலாம்

வருமதுர மானவெல் லாம்பிசைந் தன்பர்தினம்
வந்துவந் திடைவிடாமல்
வந்தனார்ச் சனைகளோ டபிசேக முஞ்செயும்
வண்மையைப் பாராயென

கருநிறக்ரீ வருக்குரை பகர்தல் போலவே
காணுநின் செயலென்னவோ
காசினி யிலொன்றில்லை யென்பவர்க்
கெதிர்மொழி
காட்சியொடு காட்டுவிதமோ

தருநிறைகளிற் கவிகள் கனிகள் பீறித்திரிவ
தாலெழில்செய் பழனிமலையில்
தன்மகிமை யின்னதென நன்னயம் விளக்கு
மொரு
தணடபாணித் தெய்வமே! 3



ஞானப் பழத்தைப் பிழிந்து ரஸமன்பினோடு
நாமுண்ணவுங் கொடுத்த
நல்ல குருநாதனுனக் கென்னவிதமிக் கனியை
நாமீவதென்று நாணித்

தானப் பனித்தலையர் தரவில்லை யாதலால்
சாருமொரு பிழையில்லையே
சத்திவடி வேலொடுந் தத்துமயி லேறிடும்
சண்முகா குறையுமுளதோ ?

ஏனிப்ப டிக்கோவ ணத்தோடுந் தண்டுகொண்
டிங்குற்றோ ராண டியானாய்
எமதுவினை பொடிபடவு மல்லவோ வந்துநீ
யிப்படியி ருக்கலாம்ஆ

சானப்பன் என்ஐயன் என்னவும் எண்ணினேன்
தருவையருள் பழனிமலையில்
சந்ததங் குடிகொண்ட சங்கரன் கும்பிடும்
தண்டபாணித் தெய்வமே 4

பொன்மயக் கிரிபெற்ற புதல்வியோ
அன்னையாம்
பொருளுக்கோர் அதிபதியெனும்
புட்பகவி மானத்தனைத் தோழ னாய்க்
கொண்ட
புங்கவனு முன்தந்தையாம்

கன்மலைக்கு டைகொண்டு மழைதடுத் தன்று
நிரை காத்தவொரு கடல்வண்ணனோ
கருதுதாய் மாமனாம் பெரியதன மேந்திடுங்
கமலமாதுன் மாமியாம்

பன்மலர்த் தொடைசூடி மூவுலகு மாள்பவன்
பார்க்கிலொரு பெண்தந்தவன்
பாரிலிப் பெருஞ்செல்வ முற்றும்நீ கோவணப்
பண்டார மாய்வருவதேன் ?

ஜென்மவெப் புப்பிணி அகற்றுமுயர் சஞ்சீவி
தழையவரு பழனிமலையில்
சகலஉல கினருமடி பரவவொரு பொருளுதவு
தண்டபாணித் தெய்வமே 5

அரையாடை யின்றிநிரு வாணியாய்க்
கரமதினில்
அன்றெருக பாலமேந்தி
அதிதிநான்பிச் சையிடு மென்றுதிரி
வோன்மைந்த
னாமெனவுநாட் டுதற்கோ!

நரைமேவி யுடல் மெலிந்தேயாவி போகவரு
நாளேனுமுறு திகொண்டு
நற்றவம்புரி வோர்கள் சித்தும்விளை யாடநா
னாவிதம் காட்டுதற்கோ!



விரைசேரு மதுமாலை கொண்டுனது
மெய்யன்பர்
வினைகங்கை யாட்டுதற்கோ!
வினையனேன் கருமங்க ளெவைகளை
யுமொன்றாய்
விரட்டியின் றோட்டுதற்கோ!
தரைமீது பொற்பதம் படவருத லேதுபுகல்
தலைமைபெறு பழனிமலையில்
தஞ்சமென வந்தவர்கள் கொண்டநினைவின்
படிசெய்
தண்டபாணித் தெய்வமே 6

தாருகனி னுடலைக் கிழித்துத் தகர்த்துத்
தடுத்தக்ர வுஞ்ச கிரியைத்
தட்டுருவ வெட்டிப் பிளந்துக்ர மேற்கொண்டு
தரைமட்ட மாக்கிவிட்டு

யாரும் நிகரில்லாத மாயவெஞ்சூரன் வா
ரிதியில் மரமான வேளை
அண்டரண் டங்களும் எணடிசை யடங்கலும்
அலறமாமுதற் றடிந்து
சேருபடை யாவையும் குத்திக் குலைத்துச்
சிவந்ததொடை யென்றுசிகையில்
செம்புனல் வழிந்தோட வுந்தசை நிணஞ்சூடும்
சித்ரவேல் கொண்ட குமரா

சாருமந் திகுட்டி யோடு நடமாடு பொழில்
தங்குமுயர் பழனிமலையில்
தரியவர்கள் மகுடமுடி பொடிபடவு
மெறியுமொரு
தண்டபாணித் தெய்வமே. 7

அரிக்கணம் ஒலிக்கும் திருப்பரங் குன்றமும்
அலைகொழிக் குஞ்செந்திலும்
அன்பர்கள் துதிக்குமுன் னாவினன் குடியுமுயர்
அந்தணர்சொ லேரகமெனும்

விரிக்குமறை யின்பொருளை யன்றுமதி
முடியோன்
விளங்கவுரை செய்தமலையும்
வேடர்கள் தினங்கூடி மதுவுண்டு வெறியாடு
வெகுகுன்று தோறாடலும்

முரிக்கரடி வெருவவரு மெனவருவி பெருகுபழ
முதிர்சோலை மலையுமேவி
முன்கண்டு கொண்டா றெழுத்தமுதமுண்டுண்டு
முறைமைபெற வருளிமிசுவும்

தரிக்கமுடி யாதவினை யகலமிக தயவுபுரி
தவமுலவு பழனிமலையில்
சமயகுரவ சரவண பவமுருக புலவகுக
தண்டபாணித் தெய்வமே 8

நக்கீர ருக்கேய னுக்ரகித் திட்டநாள்
கற்கிமுகி யைக்கொன்றனை
நயமொழிசொ லருணகிரி மனமகிழ நடனமிகு
மயிலுடனு மெதிர்நின்றனை
முக்கார ணத்தே முதற்றொழிற் கானவனை
முடியிற் புடைத்துண்டனை
முழுதுலகு சிருஷ்டிக்க வைத்தவனையக்குடிலை
முன்பொருளை மொழியென்றனை
நெக்காக வுருகுமுன தடியார்கள் நெஞ்சமலர்
நிலையமெனக் குடிகொண்டனை
நிற்பாடி யப்பாவெ னக்காது கேட்காத
நேர்மையென் சொல்லுமுருகா
தக்கோர்கள் புகழெனவு மனுதினமும்
வளருமுயர்
சந்தனப் பழனிமலையில்
சந்ததமு வந்தவர்கள் பந்தநீக் கந்தரும்
தண்டபாணித் தெய்வமே 9

ஆற்றுப் படுத்த நக்கீரனை மதிக்கிலன்
அலங்கார மனுபூதியால்
அப்பனென முப்புவிய ரொப்பவரு மருணகிரி
யைச் சொப்ப னத்தெண்ணிலேன்
தோற்றைந்து வயதுவரை ஊமையா யுனதருள்
சுரந்துகலி வெணபாமுதல்
சொல்லரும் பிரபந்த மெல்லாம் தருஞ்சாமி
குமரகுரு பரனைநினையேன்
தேற்றுமக விற்பாவி னாற்பொரு குரைத்திடும்
சிற்றம் பலவநாடியைச்
சிந்தையிற் கருதிலேன் பாடுவது மெங்ஙனம்
செப்பக்கவிப் பொருள் அருள்
சாற்றுறு பிடும்பன் மேலுக்கு காவடியிலே
தாங்கிவரும் பழனிமலையில்
தணடமிழ்க் கொடைகொடுத் தண்டினோர்க்
கருள்உதவு
தண்டபாணித் தெய்வமே. 10



# ஆன்மீகமும் அறிவியலும்

முனைவர் இரா. கலாவதி, எம்.ஏ., எம்.ஃபில்.,
மீனாட்சி மகளிர் கல்லூரி, சென்னை-24.

அறிவும் இதயமும் வளர வேண்டும். ஆன்ம வளர்ச்சியை நாடும் அறிவியல் பார்வை (Scientific outlock) இதயப் பண்பாட்டுடன் இணைந்து செயல்பட வேண்டும். இந்த இணைப்பே இந்திய ஞானமாகும். மனம் உணர்வினுட் சென்று உண்மையை அறிய விழைய வேண்டும். இதுவே பேரறிவு.

''பூட்டைத்திறப்பதும்
கையாலே
மனப்பூட்டைத் திறப்பதும்
மெய்யாலே'

என்ற ஞானக் கும்மிப் பாடல் மனப் பூட்டைத் திறந்து மெய்யறிவைக் காண வேண்டிய தேவையை உணர்த்துகின்றது. அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தை உணர்த்துவது அறிவியலின் செயலாகும்.

மனிதன் வாழும் சூழ்நிலை, சுற்றியுள்ள உலகம், பிற அண்டங்கள் முதலியவற்றின் தன்மைகளை அறிவியல் உணர்த்துகின்றது. ஆன்மீக விஞ்ஞானம் என்னும் உள்ளக் கண்ணாடி வழியே மனிதன் விஞ்ஞானத்தின் நிழலைப் பார்க்கிறான்.

## சமூகத்திஸ் தேவை

சமூகத்தின் தேவையாக ஆன்மீகமும் அறிவியலும் விளங்குகின்றன. இரட்டைப் புலவர்கள் (குருடர், முடவர்) ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டதைப் போன்று ஆன்மீகமும் அறிவியலும் ஒன்றுக்கொன்று உதவுகின்றன.

'மதம் இல்லாத அறிவியல் முடமாவது; அறிவியல் இல்லாத மதம் குருடாவது' என்ற ஐன்ஸ்டைனின் கருத்து இதை வலியுறுத்துகின்றது. உயர்தர சமய உணர்ச்சியும், உயர்தர விஞ்ஞான ஆர்வமும் ஒன்றிற்கொன்று முரண்பட்டவையல்ல. இரண்டும் ஒரே உணர்ச்சியின் இருவேறு வடிவங்களே,

அறிவியல், நல்வாழ்வுக்கு வழி வகுக்க, ஆன்மீகம் அந்நல்வாழ்வு வாழ மனிதனைப் பண்படுத்துகின்றது. பண்பட்ட மனிதனுக்கே அகக்காட்சி கிட்டுகின்றது. அவ்அகக் காட்சியே அறிவியல் கண்டு பிடிப்புகளின் திறவுகோலாக அமைகின்றது.

## தன்னை அறிதல்

தன்னைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்ற வேட்கையில் மனிதன் ஓர்ந்து ஓர்ந்து உணர்ந்து கண்ட உண்மைதான் ஆன்ம ஞானம். தன்னை அறிய முற்படும் முயற்சியில் அவன் தர்க்க வாதியாக மாறுகிறான். தான் யார்? தான் எங்கிருந்து வந்தோம்! எங்கேபோய்க்கொண்டிருக்கிறோம் என்ற வினாவை எழுப்பி, விடை காண முயலுகிறார். அதற்கு இயற்கையின் துணையை நாடுகிறான். இறைவனைப் போல இயற்கை அவனுக்குப் புரியாத புதிராகவே உள்ளது. ஆழ்ந்து நோக்கும்போது, இயற்கையின் பாடங்கள் அவனுக்குப் புலப்படுகின்றன. ஆன்மா அழியாத் தன்மையை (Ab solute) அறிந்து கொள்கிறான். அதனால் ஏற்பட்ட தெளிவில் தன் குறைகளைக் களைந்து தனித்துவம் வாய்ந்தவனாக தந்நலம் அற்றவனாக மாறுகிறான். இறைவன் படைப்பில் எல்லாம் ஒன்றே என்ற உணர்வைப் பெறுகிறான். இறுதியில் பிரமமும் தன் ஆன்மாவும் வேறல்ல ஒன்று தான் (ஓம் தத் சத்) என்னும் உணர்வில் ஆன்ம விடுதலை அடைகிறான்.

'என்ன விதமாகத் தன்னை மறப்பது சிங்கி'.
'அது ஒன்றைப்பொருந்தி யொடுங்கி யிருப்பதுசிங்கா'

என்ற ஞானரத்தினக் குறவஞ்சி தன்னை மறத்தல் பற்றிய விளக்கத்தை அளிக்கின்றது. இத்தகைய ஒடுக்க நிலையிலேயே மெய்ஞ்ஞானி ஆன்ம ஒளியும் விஞ்ஞானி அறிவொளியும் பெறுகின்றனர். முன்பு புரியாத புதிர்களாக இருந்தவை இப்பொழுது உள்ளங்கை கனியாயின.

அரைகுறை அறிவு மக்களைக் கடவுளரிடமிருந்து பிரிக்கின்றது. முழுமையான விஞ்ஞான அறிவு மக்களைக் கடவுளிடம் இழுக்கிறது. விஞ்ஞான உண்மைகள் உலக மக்கள் அனைவருக்கும் பொதுவாகி அவர்களை ஒன்று சேர்ப்பதைப் போன்று, உண்மையான மத உண்மைகள் உலக மக்கள் அனைவரையும் ஒருங்கிணையச் செய்கின்றன. மின்சாரத்தைக் கண்டுபிடித்த தாமஸ் ஆல்வா எடிசனும், பரிணாமக் கொள்கை பற்றிக் கூறிய டார்வினும் சார்புநிலை பற்றிக் கூறிய ஐன்ஸ்டைனும் ரேடியோக் கதிர்களைக் கண்டு பிடித்த கியூரி அம்மையாரும். எந்தவொரு தனி நாட்டிற்கும் தங்கள் கண்டுபிடிப்பைக் கூறவில்லை. அவர்கள் கண்டுபிடிப்பு உலக முழுமைக்கும் பொதுவானது. அதைப் போன்றே ஆன்மஞானிகளும் எந்நாட்டவராகவும், எக்காலத்தவராக இருப்பினும் உலக நன்மையையே தங்கள் குறிக்கோளாகக் கொண்டுள்ளனர் என்பதை மறந்து விடக்கூடாது.

# தமிழ் அருச்சனை

தமிழ்க்கடல் சிவத்திரு ராய. சொ. அவர்கள் தொகுத்தது



## விநாயகர் வணக்கம்

வேழ முகத்து விநாயக போற்றி
பேழை வயிற்றுப் பிள்ளாய் போற்றி
ஏழைக்கு அருள்செய் எம்மான் போற்றி
வாழ வகுக்கும் வள்ளால் போற்றி
சிவனார் பெறும்முதற் செல்வா போற்றி
சேயிழை உமைதரு சிறுவா போற்றி
திருமால் தனக்கு மருகா போற்றி
திருமகள் மகிழுமாப் பிள்ளாய் போற்றி
யானை உரித்தவன் மகனே போற்றி
யானையைக் காத்தவன் மருமான் போற்றி
யானையின் கைபெறு கோனே போற்றி
யானையால் வள்ளியை வென்றாய் போற்றி
யானை மணாளனின் அண்ணா போற்றி
யானை முகத்தனை அழித்தாய் போற்றி
பெருச்சாளி ஏறும் பெரியோய் போற்றி
பேணுவார் பிழைகள் பொறுப்பாய்போற்றி
வள்ளிதெய் வானை மைத்துன போற்றி
வல்லபை மங்கை மணாள போற்றி

கடிமணம் விரும்பாக் கணேச போற்றி
மடியினில் மாதினை வைத்தாய் போற்றி
சித்தி புத்தியின் தெய்வமே போற்றி
முத்தி கொடுக்கும் முதல்வ போற்று
மூலை முடுக்கெல்லாம் முளைத்தாய் போற்றி
மூவிரு முகத்தோன் முன்னவ போற்றி
சிதறுகாய் சிறுவருக்கு ஈவாய் போற்றி

சிவன்தேர் அச்சினைச் சிதைத்தாய் போற்றி
கொம்பு எழுத்தாணியாக்கொண்டாய் போற்றி
எம்பிரான் பிறையதில் இணைத்தாய் போற்றி
மலையினில் பாரதம் வரைந்தாய் போற்றி
மலைமகள் மகிழுமா மணியே போற்றி
முன் வணக்கங்கொள் முனைவ போற்றி
பன்னிரு தம்பிகண் எண்ணினை போற்றி
பின்னவன் மூழமிடப் பிணங்கினை போற்றி
அன்னையின் அணைப்பால் ஆறினை போற்றி
எண்ணுவார் இடரைக் களைவாய் போற்றி
எண்ணார் இடர்உற இழைப்பாய் போற்றி
பரமன் மடியுறை பண்ணவ போற்றி
பார்வதி ஈன்ற பாலா போற்றி
அப்பம் அவல்பொறி கப்புவாய் போற்றி
இப்புவி எல்லாம் இருப்பாய் போற்றி
ஓங்கா ரப்பொருள் உணர்த்துவாய் போற்றி
தீங்கெலாம் அகற்றும் செம்மல் போற்றி
குட்டிக் குனிப்புறக் கொள்வாய் போற்றி
பட்டிதொட்டிஎலாம் படர்வாய் போற்றி
குளக்கரை தொறும்குடி கொண்டாய் போற்றி
அளப்பரும் ஆற்றல்கொள் அம்மான் போற்றி
அரசின் நிழல்அமர் அரசே போற்றி
பரசுவார் பவப்பிணி அறுப்பாய் போற்றி
அறுகினை ஆசையோடு அணிவாய் போற்றி
உறுபெரு மோதகம் உவப்பாய் போற்றி
உலகீன்ற கன்னியின் குலமுதல் போற்றி
நலமெலாம் நம்பர்க்கு அருள்வாய் போற்றி
மலைபோல் வருதுயர் மாய்ப்பாய் போற்றி
கலையெலாம் கருத்துள் வளர்ப்பாய் போற்றி
அலகிலா விளையாட்டு அயர்வாய் போற்றி
உலகெலாம் அடக்கிய உத்தியாய் போற்றி
மலைமகள் மடிதவழ் மைந்தா போற்றி
நலம்நுகர் அவர்திறம் நகைப்பாய் போற்றி
புலவர்க்கு விருந்தாய்ப் பொலிவாய் போற்றி
கலக லெனச்சிறார்க் கவர்வாய் போற்றி
பேரொளி பரப்பும் பெருமுடி போற்றி
பாரதம் எழுதிய ஓர்பிறை போற்றி
கூருறும் மற்றைக் கொம்பும் போற்றி
கார்என அருள்பொழி கண்இணை போற்றி
நான்மறை பகர்ந்தருள் நால்வாய் போற்றி
வான்குறை கேட்டருள் மாச்செவி போற்றி
மோதக மணநுகர் மூக்குப் போற்றி
போதகப் புண்ணியப் பொலிமுகம் போற்றி
மண்முழுது அடக்கிய வயிறு போற்றி
கண்அகல் உந்திக் கமலம் போற்றி
வாரி வழங்கு கை ஐந்தும் போற்றி
சீரியோர் முடிபடி திருவடி போற்றி
சிவனார் கோயிலில் திகழ்வாய் போற்றி
தவமாச் செல்வர்சொல் தவமே போற்றி
அம்பிகை கோயிலும் அமர்வாய் போற்றி

நம்பினார் துன்பெலாம் நலிவாய் போற்றி
தம்பி கோயிலிலும் தங்குவாய் போற்றி
உம்பரும் போற்றும் ஒருவ போற்றி
காளி கோயிலும் காப்பாய் போற்றி
ஊழி தோறும் உலவுவாய் போற்றி
பெருமாள் கோயிலுப் பிறங்குவாய் போற்றி
திருமால் தங்கைநற் செல்வ போற்றி
அடியார் கோயிலும் அமர்வாய் போற்றி
கடிசேர் அறுகணி கணபதி போற்றி
தனிப்பெருங் கோயிலும் சார்வாய் போற்றி
மனித்தரைக் கவர்தரு வள்ளால் போற்றி
எங்கும் இருக்கும் இறைவ போற்றி
மங்கலம் தொடங்குமுன் வருவாய் போற்றி
கங்கை அணிந்தவன் கனியே போற்றி
நங்கை உமைதரு புங்கவ போற்றி
எளிமையில் அருள்புரி இறைவ போற்றி
ஏழைகள் பங்கில் இருப்பவ போற்றி
தும்பிக்கை பெறு தோன்றால் போற்றி
தம்பிக்கு வள்ளியைத் தந்தாய் போற்றி
அறிவு மதம்பொழி ஆனையே போற்றி
குறைவிலாப் பெருங்குணக் குன்றே போற்றி
கூத்துடை யான்தரு குமரா போற்றி
கூத்துகந்து ஆடும் குரிசில் போற்றி
சந்திதோறு இருக்கும் தத்துவ போற்றி
சிந்தையுட் புகுந்த தேவா போற்றி
கணநாத போற்றி சுயமுக போற்றி
விநாயக போற்றி விக்கின போற்றி
எண்ணிய ஈவாய் போற்றி போற்றி
புண்ணியப் பிள்ளையார் போற்றி போற்றி



## முருகர் வணக்கம்

திருப்பரங்குன்று இனிதுறையும் செல்வா போற்றி
திருச்செந்தூர்ச் சீரலைவாய்த் தேவா போற்றி
திருப்பழநி மலையிருக்கும் தேவே போற்றி
திருவேரகச்சாமி நாதா போற்றி
திருத்தணிகை முதன்மலைகள் திகழ்வாய் போற்றி
தீம்பழங்கள் உதிர்சோலை சேர்வாய் போற்றி
திருப்பொலிய உலகாளும் செம்மால் போற்றி
செந்தமிழர் தெய்வமே போற்றி போற்றி
சொக்கேசர் பெற்றஉயர் தோன்றால் போற்றி
தொல்உமையாள் ஈன்றெடுத்த சோதி போற்றி
சக்கரம்கொள் மால்தங்கை தனையா போற்றி
தத்துவங்கள் கடந்ததனிப் பொருளே போற்றி
நக்கீரர் பழம்பாட்டை நயப்பாய் போற்றி
நாவலர்கள் கவிக்கினிய நம்பா போற்றி
விக்கின விநாயகனுக்கு இளையாய் போற்றி
வேடர்குல மாப்பிள்ளாய் போற்றி போற்றி
அருணகிரி நாவில்நடம் புரிவாய் போற்றி
அனுபூதி அலங்காரப் புகழாய் போற்றி
கருணைபொழி பன்னிரண்டு கண்ணா போற்றி
கார் அனைய கைஈராறு உடையாய் போற்றி
அருள்சுரக்கும் ஆறுமுகத்து அண்ணால் போற்றி
ஆலாலம் உண்டகண்டன் பாலா போற்றி
வெருவுறச்சூர் தடிந்தவடி வேலா போற்றி
மெய்ஞ்ஞானப்பிள்ளையே போற்றி போற்றி
வள்ளியெனும் குறக்கொடியை மணந்தாய் போற்றி
மணப்பதற்கு மரம்போல நின்றாய் போற்றி
கொள்ளைகொளும் எழில் அமைந்த குமரா போற்றி
கும்பிடுவார் இடர்களையும் குகனே போற்றி
தெள்ளுதமிழ்ப் பெருங்கடலுள் திளைப்பாய் போற்றி
தீந்தமிழால் வைதார்க்கும் அருள்வாய்போற்றி
புள்ளிமயில் ஏறிவரும் புனிதா போற்றி
புண்ணியம்செய் புண்ணியமே போற்றி போற்றி
தேவயானையை மணஞ்செய் சிங்கம் போற்றி
தேவசேனாபதியாகத் திகழ்ந்தாய் போற்றி
தேவயானைக்கினிய சிறுவா போற்றி
தேவேந்திரன் மருமகனாம் செம்மல் போற்றி
தேவர்சிறை மீட்டருள்செய் தீரா போற்றி
தேவரெலாம் தொழச்சிறந்த தேவே பொற்றி
தேவாரம் புகழ்சிவனார் மைந்தா போற்றி
தேவாதி தேவனே போற்றி போற்றி
கந்தா குகா கடப்பந்தாராய் போற்றி
காதலியர் இருவரையும் பிரியாய் போற்றி
கொந்தாரும் குறிஞ்சிப்பூந் தொடையாய் போற்றி
கோழிஎனும் கொடிகொண்ட குரிசில் போற்றி
செந்தேறல் தினைமாவோடு உண்டாய் போற்றி
தினைகாத்த சிறுமிமயல் சேர்ந்தாய் போற்றி
எந்தாயே எம் எப்பா இறைவா போற்றி
எழுத்தழிக்கும் இணையடிகள் போற்றிபோற்றி
சரவணத்தில் வந்துதித்த தவமே போற்றி
சரவணபவா; கார்த்திகேயா போற்றி போற்றி
முருகனெனும் அழகுஇளமை முதலே போற்றி
முனிவர்களும் வணங்குகின்ற மூர்த்திபோற்றி
திருகுகுணத்து அசுரர்விழச் செற்றாய் போற்றி
தேவர்மறைத் தீவளர்த்த சீரோய் போற்றி
உருகுமனத்து அடியர் உளத்து உறைவாய் போற்றி
உறுகிரிகள் உறைபவனே போற்றி போற்றி
மாம்பழத்துக்கு உலகைவலம்வந்தாய் போற்றி
மயில்ஏறிக் கணப்பொழுதில் அடைந்தாய் போற்றி

தீம்பழத்தை அண்ணன் உணக் கண்டாய்
போற்றி
தே முதல்வன் செய்சூழ்ச்சி அறிந்தாய் போற்றி
தேம்பதுமப் பிரமன் அஞ்சச்செய்தாய் போற்றி
சிறையிட்டுப் பொருள்கூறும் செவ்வாய்போற்றி
காம்பழிதோட் கயற்கண்ணி கண்ணே போற்றி
கட்டழகுக் கடவுளே போற்றி போற்றி
உலகீன்ற ஒருகன்னி மகனே போற்றி
ஊழிமுதல் சிவன்தந்த ஒருவ போற்றி
பலகலையும் உணர் அறிவுப் பழமே போற்றி
பன்னிரண்டுகண் கைகள் படைத்தாய்போற்றி
மலர்ஆறு முகம்கொண்ட வள்ளால் போற்றி
வள்ளி மலா அடி வணங்கும் மணாளா போற்றி
மயில்ஏறும் பெருமானே போற்றி போற்றி
மலைபிளக்க வேல் எறிந்தமன்னா போற்றி
கடல்வற்ற வேல்விட்ட கடம்பா போற்றி
கார் அவுணக் கடல்குடித்த காளாய் போற்றி
குடல்சரியச் சூரன்உரம் குடைந்தாய் போற்றி
குன்றமெல்லாம் குடிகொண்டகுழவி போற்றி
மடவர்மார் வயிற்றில் தீ வைத்தாய் போற்றி
மறைவகுத்த மகத்தீயை வளர்த்தாய் போற்றி
படஅரவில் துயில்மாயோன் மருகா போற்றி
பாம்பணிந்த பரன்மகனே போற்றி போற்றி
மருவினிய மலர்ப்பாதம் போற்றி போற்றி
மாவீரச் சிலம்புக்கால் போற்றி போற்றி
பொருவரியபொன்னின்இடைபோற்றி போற்றி
போர்வல்ல வரைமார்பம் போற்றி போற்றி
தருகொடைக்கை பன்னிரண்டும் போற்றி
போற்றி
தாயெனும்சீர் முகம் போற்றிபோற்றி
அரன்மகிழ மறைபுகல்வாய் போற்றி போற்றி
அருட்கண்கள் போற்றியோ போற்றிபோற்றி

---



## சிவ வணக்கம்

அம்பலத்து ஆடும் அரனே போற்றி
ஆனைமா முகனை அளித்தவ போற்றி
இளைய முருகனை ஈன்றாய் போற்றி
ஈறிலாப் பெருவாழ்வு ஈவாய் போற்றி
உமைக்கொரு கூறளி உத்தம போற்றி
ஊழி முதல்வ நின் ஒண்கழல் போற்றி
எந்தையும் யாயுமாய் இயைந்தனை போற்றி
ஏழை பங்க நின் இணையடி போற்றி
ஐயா அரசே அமுதே போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
ஓசையாய்ப் பொருளாய் ஒன்றினை போற்றி
ஔவிய நெஞ்சினர்க்கு அரியாய் போற்றி
அஃகம் வளர அருள்வாய் போற்றி
கல்ஆல் அமர்ந்த சொற் கடந்தவ போற்றி
'ங'பபோல் வளைய நவில்வாய் போற்றி
சடையாய் விடையாய் உடையாய் போற்றி
ஞயமாய் உரைதர நயப்பாய் போற்றி
மடம்படு வாழ்வை மாய்ப்பாய் போற்றி
வணங்கத் தலையை வைத்தாய் போற்றி
தழுவக் குழைந்த தண்ணளி போற்றி
நச்சரவு ஆட்டிய நம்பி போற்றி
பந்தணை விரலாள் பங்க போற்றி
மண்டிய தழல்நிற வண்ணா போற்றி
மயல்கெடுத்து ஆளும் மணாள போற்றி
அரவம் அணிந்த அந்தண போற்றி
நிலம்தீ வான்கால் நீரே போற்றி
வண்கவி வள்ளல்கள் வள்ளால் போற்றி
மழவிடை ஏறும் மன்னா போற்றி
அளவெலாம் கடந்த ஐயா போற்றி
பிறப்பு இறப்பு இல்லாப் பெரும போற்றி
மனமாசு அறுசிவ மணியே போற்றி
கற்றவர் உண்ணும் கனியே போற்றி
காலனை உதைத்தருள் கழற்கால் போற்றி
கிழவா இளையாய் குழவி போற்றி
கீழ்மேல் உலகெலாம் கிளர்ந்தாய் போற்றி
குழவி மதியணி குழகா போற்றி
கூத்துகந்து ஆடும் கொற்றவ போற்றி
கெடுதல் தவிர்த்துஆள் கேடிலி போற்றி
கேதம் கெடுத்த கிளர்ஒளி போற்றி
கைலைசேர் முழுமுதற் கடவுளே போற்றி
கொல்புலித் தோல்உடைக் கோமான் போற்றி
கோதறு நற்குணக் குன்றே போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சாதிகள் கடந்த தத்துவ போற்றி
சிலையால் எயில்எரி சேவக போற்றி
சிறுடைச் சிவபுரத்து அரசே போற்றி
சுந்தரன் தனைத்தடுத்து ஆண்டவ போற்றி
சூது பொய் களவு தொலைப்பாய் போற்றி
செந்தமிழ் தந்த செம்மலே போற்றி
சேக்கிழார் தீந்தமிழ் திளைப்பாய் போற்றி
சைவம் தழைக்கநில் தவமே போற்றி
சொல்லும் பொருளுமாம் தூமணி போற்றி
சோதியுள் சோதியாய்த் துலங்குவாய் போற்றி
ஞானசம் பந்தனை நயந்தாய் போற்றி
நிமிறுசேர் கொன்றை நீள்சடை போற்றி
ஞேயநல் அடியார் நினைவே போற்றி
தண்தமிழ்ச் சங்கத் தலைவா போற்றி
தாயே தாதாய் சங்கரா போற்றி
திருவா சகம்பெறு செல்வா போற்றி
தீஞ்சுவைக் கவிஞர்பாத் தேனே போற்றி
துரியம் கடந்த தொல்லோய் போற்றி
தூக்கிய திருவடிச் சோதி போற்றி
தென்னாடு உடைய சிவனே போற்றி
தேவா ரம்நுகர் செவியாய் போற்றி
தையலைத் தலைக்கொள் சதாசிவ போற்றி
தொண்டர் உளம்அமர் தூயோய் போற்றி
தோலும் துகிலும் புனைவாய் போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
நாற்றிசை விளக்காம் நாதா போற்றி

நினைப்பவர் நெஞ்சில் நின்றாய் போற்றி
நீறு செம் பசுமை நிறத்தாய் போற்றி
நுண்ணியாய் அகன்றாய் ஆழ்ந்தாய் போற்றி
நூபுரச் சீரடி தருவாய் போற்றி
நெற்றிமேல் ஒற்றைக் கண்ணாய் போற்றி
நேயத் தேநில் நிமல போற்றி
நைவளப் பண்பா நாடினை போற்றி
நொந்தவர்த் தாங்கும் நோன்தாள் போற்றி
நோய் பசி தீர்க்கும் தாய்அருள் போற்றி
பன்னிரு திருமுறைப் பாடலாய் போற்றி
பார்த்தனுக்குஅருள்செய்பரம்பொருள்போற்றி
'பித்தன்' எனப் பெறு வித்தக போற்றி
பீடெலாம் கொண்ட பெம்மான் போற்றி
புத்தேள் போற்றும் பொன்னடி போற்றி
பூவார் சென்னிப் புனிதா போற்றி
பெருநஞ்சு உண்டருள் பெரியோய் போற்றி
பேதைமை அகற்றும் பிஞ்ஞக போற்றி
பைஅராப் பூண்ட பரமனே போற்றி
பொய்வளர் நெஞ்சம் புகாதாய் போற்றி
போக்கு வரவிலாப் பொருளே போற்றி
மதன்படத் திறந்த நுதல்விழி போற்றி
மாதவர் மகுடமா வயங்குவாய் போற்றி
மீண்டு மனத்தரை விடுவாய் போற்றி
மீறிய புலவோர் விருந்தே போற்றி
மும்மலம் அறுக்கும் முக்கண்ணா போற்றி
மூவர் தமிழ்க்கடல் மூழ்குவாய் போற்றி
மெய்கண் டானைஆட் கொண்டனை போற்றி
மேலவர்க்கு எல்லாம் மேலவ போற்றி
மையல் கெடுத்தாள் வரதனே போற்றி
மொழிஅரை யன்கவி முதலே போற்றி
மோகித்து அணைவார்க்கு ஏகனே போற்றி
யானை உரிபோர்த்து அருளினை போற்றி
வங்கக் கடல்நஞ்சு உண்டாய் போற்றி
வாதவூர் வள்ளல்பா மாந்தினை போற்றி
வினைகெடுத்து ஆளும் முன்னவா போற்றி
வீட்டின்பு அருளவல் விமலா போற்றி
வெண்ணீறு ஆடிய புண்ணிய போற்றி
வேதமும் அங்கமும் மேயினாய் போற்றி
வையக வாழவே போற்றி போற்றி



## அம்பிகை வணக்கம்

சிவனார் மனமகிழ் தேவி போற்றி
செங்கண்மால் பின்வரு செல்வி போற்றி
இமவான் பயந்த இறைவி போற்றி
இறைவன் இடப்புறம் இருந்தாய் போற்றி
உமையே உண்ணா முலையே போற்றி
உலகெலாம் ஈன்றருள் ஒருத்தி போற்றி
தந்தி முகவனின் தாயே போற்றி
கந்தனைப் பெற்றருள் கன்னி போற்றி
ஞானசம் பந்தனை நயப்பாய் போற்றி
ஞானப் பால்கொடுத்து அருளினை போற்றி
ஈசனார் நெருப்புருத் தவிர்ப்பாய் போற்றி
இடப்புறம் குளிர்ச்சியை இடுவாய் போற்றி
காலம் கடந்த கடவுள் போற்றி
கற்பனை தாண்டிய கற்பகம் போற்றி
எழுதாச் சொல்லின் எழிலே போற்றி
இகமும் பரமும் ஈவாய் போற்றி
தோன்றாத் துணைக்கோர் துணையே போற்றி
துவாத சாந்தம் கடந்தாய் போற்றி
மூலத் தலத்து முதலே போற்றி
முக்கட் சுடர்க்கு விருந்தே போற்றி
தண்ணார் தமிழின் சுவையே போற்றி
கண்ணார் அமுதக் கடலே போற்றி
பிறவிப் பிணிக்கு மருந்தே போற்றி
பேசா மறையின் பொருளே போற்றி
அமிழ்தினும் இன்மொழி அருள்வாய் போற்றி
தமிழ்க்கடல் மாந்தும் தலைவி போற்றி
சிவனை ஈன்றருள் செந்திரு போற்றி
சிவனார் தந்தநல் திருவே போற்றி
அன்றிவ் உலகெலாம் அளித்தாய் போற்றி
என்றும் கன்னியாய் இருப்பாய் போற்றி
ஒன்றிய உணர்வோர் உணர்வே போற்றி
ஒன்னார் நெஞ்சில் உறைவாய் போற்றி
தெவ்வர் பகைஅடு தேவே போற்றி
பவ்வ நெடுங்கடல் படிவே போற்றி
பண்ணார் இன்தமிழ்ப் பாவாய் போற்றி
எண்நான்கு அறமும வளர்ப்பாய் போற்றி
கண்ணும் கருத்தும் நிறைந்தாய் போற்றி
விண்ணோர் மிளிர்முடி விளக்கே போற்றி
புலவர் நாவில் பொருந்துவாய் போற்றி
புண்ணிய யோகப் பொலிவே போற்றி
அகந்தைக் கிழங்கை அகழ்வாய் போற்றி
அற்புதன் ஆகம் ஆண்டாய் போற்றி
மகிட முகத்தனை மாய்த்தாய் போற்றி
சகடவாழ்வு அடுதையல் நாயகி போற்றி
வினைஎலாம் கெடுக்கும் விமலி போற்றி
நனைமலர்ச் சேவடி நல்குவாய் போற்றி
வேத முடிமேல் விளங்குவாய் போற்றி
நாதப் பொருளா நண்ணுவாய் போற்றி
கற்றவர் சுவைக்கும் கரும்பே போற்றி
அற்றவர்க்கு அருளும் அரசி போற்றி
பார்த்தனுக்குஅருள்செயப்பணித்தனைபோற்றி
தீர்த்தன்பின் வேட்டுருத் தெரிந்தனை போற்றி
பன்றிபின் பதியொடு வந்தனை போற்றி
குன்றெறி குழவியை ஏந்தினை போற்றி
செழியர் பிரான்திரு மகளே போற்றி
வழுதிநாடு ஆண்டபெண் மணியே போற்றி
உலகினை வென்றிகொள் ஒண்தொடி போற்றி
கலைபல கற்றுணர்க் காரிகை போற்றி
சொக்கற்கு மாலை சூட்டினாய் போற்றி
சொக்கற்கு மகுடமும் சூட்டினாய் போற்றி
தமைபொருள் தலைவர்க்குத் தந்தனைபோற்றி



தமிழ்அவைத் தலைமையும் தந்தாய் போற்றி
முழுமுதல் தொட்டநின் மொய்குழல் டோற்றி
விழுமியோர் முடிதவழ் மெல்லடி போற்றி
கருங்குழல் செவ்வாய்க் கார்மயில் போற்றி
ஒருங்கிய சாயல் சுருங்கிடை போற்றி
குவளைக் கண்ணி குரைகழல் பே॥ற்றி
தவள வெண்ணகைத் தண்ணளி போற்றி
சுரும்பமர் நறுமலர்ச் சுரிகுழல் போற்றி
துரியம் கடந்தநல் சுடர்முகம் போற்றி
குழவித் திங்கள்சேர் எழில்நுதல் போற்றி
முழுதுலகு அருள்தரு விழிக்கயல் போற்றி
டண்ணமர் மொழிபகர் பவளவாய் டோற்றி
புண்ணியப் பேறளி புன்னகை போற்றி
துன்னுபொன் ஆடைத் தொடித்தோள்போற்றி
மின்னிகர் பொன்கொடி நுண்ணிடை போற்றி
சரமும் அபயமும் வழங்குனக போற்றி
வரதம் வீடருள் தாளிணை போற்றி
சிங்கம் வீடருள் தாளிணை டோற்றி
சிங்கம் ஏறும் சேவகி போற்றி
வெங்கநஞ்சு உண்டவன் மணாட்டி போற்றி
மரகதக் கொடிப்பெரு மாட்டி போற்றி
மாணிக்க வல்லி மாதா போற்றி
அபிடேக அபிராம வல்லி போற்றி
பங்கயற் கண்ணுடை அம்மை போற்றி
அல்லியங் கோதை அலங்கலாய் போற்றி
அபிரா மித்தாய் அணங்கே போற்றி
ஆவுடை நாயகி அன்னே போற்றி
ஆளுடை அம்பிகை அம்மா போற்றி
ஞானப்பூங் கோதை நங்காய் போற்றி
தேனக்க கொன்றைத் தெரியலாய் போற்றி
பார்வதி பராபரை பைரவி போற்றி
நாரணி பெரிய நாயகி போற்றி
அன்ன பூரணி அம்பிகை போற்றி
மன்னுமீ னாட்சி மடப்பிடி போர்றி
விசுவநா தன்மகிழ் விசாலாட்சி போற்றி
பசுபதி பங்குறு பரமேட்டி போற்றி
சக்தி கரும்புவில் தாங்குவாய் போற்றி
பக்தி வலையில் படுபவள் போற்றி
வாமனி நீலி வராகினி போற்றி
கோமள வல்லி கோமதி போற்றி
மயிலே அமுதே மானே போற்றி
குயிலே தேனே கொழுந்தே போற்றி
சுந்தரி: சங்கரி? சூலி போற்றி
அந்தரி சாமள அமலை போற்றி
காமாட்சி? காந்தி மதித்தாயே போற்றி
கவுரி சிவகாமிழுக் கண்ணி போற்றி
அன்பெலாம் ஒருரு ஆனாய் போற்றி
அவனியின் அன்னையே போற்றி போற்றி

---



## திருமால் வணக்கம்

அரங்கம் பள்ளிகொள் அரியே போற்றி
ஆழ்வார் அமுதம் அருந்தினை போற்றி
இளையவர் ஏத்தும் இராம போற்றி
ஈரடி மாருதிக்கு ஈந்தனை போற்றி
உடையவர் போற்றிய ஒருவ போற்றி
ஊழி முதல்வ நின் ஒண்கழல் போற்றி
எட்டெழுத் தாக இலங்குவாய் போற்றி
ஏனமாய்ப் பாரை இடந்தாய் போற்றி
ஐந்தலைப் பாம்பினில் ஆடினாய் போற்றி
ஒருசிறு குறளாய் உதித்தாய் போற்றி
ஓங்கி உலகம் அளந்தாய் போற்றி
ஔடதம் அகப்பிணிக்கு ஆவாய் போற்றி
அஃகி அகன்ற அறிவே போற்றி
கல்லுக்கு உயிர்தரும் காகுத்த போற்றி
'ங'ப்போல் அவனியை நயப்போய் போற்றி
சட்டெனக் கல்மழை தடுத்தாய் போற்றி
ஞயம்சேர் மொழியருள் நம்ப போற்றி



மடம்செறி கஞ்சனை மாய்த்தாய் போற்றி
வணங்கான் முடிவிழ வகுத்தாய் போற்றி
தடவரை மார்பனைத் தடிந்தாய் போற்றி
நரனொடு சிங்கமாய் நண்ணினை போற்றி
பரசு ராமனாம் பண்ணவ போற்றி
மழிசைப் பிரான்தமிழ் மாந்தினை போற்றி
உயர்வற உயர்நலம் உடையவ போற்றி
அரவர சில்துயில் அப்பா போற்றி
பலரா மப்பெயர் படைத்தாய் போற்றி
வருபரி யாகும் மாதவ போற்றி
மழவிடை அடர்த்த மைந்தா போற்றி
ஆளவந் தார்க்கருள் அமரா போற்றி
பிறவிவேர் அறுக்கும் பெருமான் போற்றி
மீனமாய் வந்த விண்ணவ போற்றி
கமடமாய்த் தாங்கிய கார்வண போற்றி
கான்கடல் கடந்த கருணையே போற்றி
கிராதனைத் தோழனாக் கிளத்தினை போற்றி
கீதை புகன்றருள் கிருட்டிண போற்றி
குலசே கரப்பிரான் குழைதமிழ் போற்றி
கூடார் 'தமைவெல்லும் கோவிந்தா போற்றி
கெழுதகை நிலமகள் சேள்வா போற்றி
கேசவ இருடி கேசா போற்றி
கைதவர் காணாக் கார்முகில் போற்றி
கொண்டல் நிறத்துக் குரிசில் போற்றி
கோதண்டம் கொண்ட கொண்டலே போற்றி
சங்கு சக்கரம் தாங்கினாய் போற்றி
சார்ங்கம் கதைவாள் தரித்தாய் போற்றி
சிவனை வலத்தினில் சேர்த்தாய் போற்றி
சீதையை மணந்த சீதர போற்றி
சுக்கிரீ வற்கருள் தோன்றால் போற்றி
சூடிக் கொடுத்தவன் துணைவா போற்றி
செந்தமிழ்ப் பாக்கடல் திளைப்பாய் போற்றி

சேய்பிரகலாதன் செய்தவ போற்றி
சையமால் வரையில்நில் தலைவா போற்றி
சொற்பதம் கடந்த தூமணி போற்றி
சோர்விலாத் தொல்பதம் தருவாய் போற்றி
ஞாலம் போற்றும் நல்லடி போற்றி
ஞிமிறு துளவணி நெடுமால் போற்றி
ஞேயர்தம் நெஞ்சில் நின்றாய் போற்றி
தயரதன் செய்தமா தவமே போற்றி
தாமோ தரமது சூதன போற்றி
திருவாழ் மார்புறு செல்வா போற்றி
தீவினை செறுதிரி விக்ரம போற்றி
துரோபதை சோர்வு துடைத்தாய் போற்றி
தூது நடந்தருள் தொல்லடி போற்றி
தெரிவை தேவகி சிறுவர் போற்றி
தேசிகர் கவிநுகர் செவியாய் போற்றி
தையல் யசோதை தனையா போற்றி
தொண்டர் அடித்திருத் தொங்கலாய் போற்றி
தோகை உருக்மணி தோழா போற்றி
நம்மாழ் வார்மொழி நயந்தனை போற்றி
நாரா யணநின் நற்பதம் போற்றி
நின்றாய் இருந்தாய் கிடந்தாய் போற்றி
நீரிடைத் துயில்கொள் நெடியோய் போற்றி
நுண்இடைப் பாமைதோள் நோக்கினாய் போற்றி
நுற்றுவர் ஆற்றலை மாற்றினாய் போற்றி
நென்னலாய் இன்றாய் நாளையாய் போற்றி
நேயர்தம் நெஞ்சம் நிறைந்தாய் போற்றி
நையார் மனத்தையும் நைவிப்பாய் போற்றி
நொடியும் மறக்கிலா நோன்தாள் போற்றி
நோயில் வாழ்வுஅருள் நுண்ணியாய் போற்றி
பத்மநா பா பரந் தாமா போற்றி
பாணாழ் வாரைஆட் படுத்தினை போற்றி
பிரமனை உந்தியில் பெற்றாய் போற்றி
பீதக ஆடைப் பெம்மான் போற்றி
புள்ளரசு ஊரும் புண்ணிய போற்றி
பூதத் தார்பாப் போற்றினை போற்றி
பெரியாழ் வார்தமிழ் பேணினை போற்றி
பேயார் பாசுரப் பேழையே போற்றி
பைந்தமிழ்ப் பின்செல் பரமனே போற்றி
பொய்கையார் போற்றிய புனிதா போற்றி
போதப் கடந்தநற் பொருளே போற்றி
மங்கைமன் னன்பா மகிழ்ந்தனை போற்றி
மாயவ வைகுந்த வாமன போற்றி
மின்னிகர் பின்னையை வேட்டாய் போற்றி
மீனக் கொடியனை ஈன்றாய் போற்றி
முனிமண வாளர்சொல் முதல்வா போற்றி
மூஉலகு ஆளும் முன்னோய் போற்றி
மெல்லியல் இராதையை மேவினாய் போற்றி
மேல்மது ரக்கவி விழைவாய் போற்றி
மையே மழைமுகில் வடிவே போற்றி
மொழிதமிழ்க் கடலுள் முழுகினாய் போற்றி
மோகனப் பாற்கடல் முகிழ்த்தாய் போற்றி
யானைக்கு அருளிய வானவ போற்றி
வள்ளல் தமக்கெல்லாம் வள்ளால் போற்றி
வாலிக்கு வீடு வழங்கினை போற்றி
விட்டுணு எனப்பேர் விளங்கினை போற்றி
வீடணற்கு அடைக்கலம் விளம்பினை போற்றி
வெண்ணெய் உண்டசெவ் வாயனே போற்றி
வேய்ங்குழல் இசைத்த வித்தக போற்றி
வையம் உண்டவா போற்றி போற்றி

---

# திருமூலர் நோக்கில் சைவ சித்தாந்தம்

புலவர் வீரை ம. சுவாமிநாதன்

அப்பரகம், வீரவநல்லூர் - 627 426.



முன்னுரை : உலகில் நிலவும் தொன்மையான சமயங்களுள், பழமைக்குப் பழமையாகவும், புதுமைக்குப் புதுமையாகவும், எக்காலத்தும், நின்று நிலவும் சிறப்பிற்குரிய சமயம் நம் சைவ சமயமென்பது எல்லோராலும்ஒப்புக் கொள்ளப்பட்ட ஒன்றாகும். நமது சமய நெறியொழுக உதவும் நூல்கள், பதினான்கு சாத்திரங்களாகவும், பன்னிரண்டு திருமுறைகளாகவும் வகுக்கப்பட்டு கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. அவற்றைச் சாத்திர நூல்கள் என்றும் தோத்திர நூல்கள் என்றும் கூறுவர். சாத்திர நூல்கள் இலக்கணம் போன்றது. தோத்திர நூல்கள் இலக்கியம் போன்றது. ‘இலக்கியம் கண்டதற் கிலக்கண மியம்பல்’ என்றபடி இலக்கியம் எழுந்ததன் பின், அவற்றைஆய்ந்து இன்ன இன்ன செய்யுட்கள் இன்னின்ன தன்மையுடைமையால் இவ்வாறு வகுத்துக் கொள்ளலாம் எனக்கற்ற நற்புலவோர் முடிவெடுத்துத் தோற்றுவிக்கப்பட்டவையே இலக்கணங்களாம். இலக்கணம் கண்டபின் தோன்றும் இலக்கியங்கள் இலக்கணத்திற்குட்பட்டு அமைதல் வேண்டும். எனவே, இங்கு இலக்கியங்களாகிய தோத்திரங்களே முதலில் தோன்றி அத்தோத்திரங்களில் காணப்பெறும் சித்தாந்தக் கொள்கைகளை மிகத் தெளிந்து உருவாக்கி உலகிற்கு வழங்கப்பட்டவை சாத்திரங்கள் எனக் கருதலாம். எனவே நமது சாத்திர நூல்களில் கூறப்பட்டுத் தெளிவுபடுத்தியுள்ள சித்தாந்தக் கருத்துக்களனைத்தும் தோத்திர நூல்களிலுண்டு. அவற்றைக் கண்டு ஒப்புநோக்கி இன்புறுவதோடு பிறரறியவும் உதவும் நோக்குடன் அமைக்கப்பட்டதே இக்கட்டுரையாகும். பத்தாம் திருமுறையாக வகுக்கப்பட்டுள்ள திருமந்திரம் தோத்திர நூல் வரிசையிலிருப்பினும் இது தனித்தோத்திர நூல் இல்லை. இதில் சாத்திரக் கருத்துக்கள் விதந்து ஓதப்பட்டுள்ளன. பல தத்துவக் கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன. மந்திரங்களும், பீசங்களும், சக்கரங்களும் மேற்கொள்ளும் வழிமுறையும் விளக்கப்பட்டுள்ளது. எனவே, இது சாத்திரத் தோத்திர நூலென்று கொள்ள வேண்டும்.

ஆசிரியர்: இந்நூலாசிரியர் திருமூல தேவ நாயனாராவார். இவர் திருத்தொண்டர் புராணத்தினடியார்கள் அறுபத்து மூவருள் ஒருவர். பல பிறவிகளில் முயன்று இறையருட்பேறெய்தி, கலை மேவி, நந்திபால் உபதேசம் பெற்றுச் சுந்தரநாதன் எனத் திகழ்ந்தவர். தம் நண்பரான அகத்திய முனிவரைப் பொதிகையில் கண்டு அளவளாவ விரும்பி வான்வழிப் புறப்பட்டு இமயத்திலிறங்கிக் காசியடைந்து, கங்கையாடித் தெற்கு நோக்கி நடக்கலானார். பல தலங்களை வழிபட்டு நதிகளில் மூழ்கித் திருவாவடுதுறை வந்தடைந்தார். அங்கே அவரது மனம் தங்க விரும்பியதால் சில நாட்கள் தங்கித் தெற்கே புறப்பட்டார். ஊரைக்கடந்து ஆற்றுப்படுகையை யடைந்தபோது காலிகளும் கன்றுகளும், கண்ணீர் பெருக்கியபடி நிற்பதைக் கண்டு நெருங்கிப் பார்த்தபோது மேய்ப்பன் இறந்து கிடந்ததைக் கண்டார். உடன் தனதுடலைப் பாதுகாப்புச் செய்து தன்னுடலிலிருந்து அவனுடலினுட் புகுந்து எழ, காலிகள் துன்பம் நீங்கி மேயச் சென்றன. மாலையானதும் அவை வீடு திரும்பின. இவர் அவற்றின் பின் வந்தார். எல்லாம் அவ்வவற்றிற்கு உரிய வீடுகளைச் சென்றடையத் தான் ஊருக்கு வெளியேயுள்ள மரத்தடியில் வந்தமர்ந்தார். மேய்ப்பன் மனைவி வந்து அழைத்தபோது ‘யார் நீ! உனக்கும் எனக்கும் என்ன தொடர்பு!’ என்று கேட்க அவ்வம்மையார் கரம்பற்றி அழைக்க மூயன்றார். ‘என்னை நீ தொடலாகாது. சென்றுவா’ என்று கூற அவள் ஊராரிடம் முறையிட்டாள். ஊர்ப்பெரியவர்கள் சென்றபோது நிட்டை கூடியிருந்தமையையறிந்து, ‘அம்மா இனி மூலன் உன்னுடன் வாழமாட்டான். அவன் இறைருயள் பெற்று நிட்டை கூடிவிட்டான். எனவே, இனி உன் பொறுப்புகளை நீயே ஏற்று நடப்பாயாக’ என்று கூறி அழைத்துச் சென்றனர். மறுநாள் காலை காலிகள் மேய வந்ததும், அவற்றைத் தொடர்ந்து வந்து தனதுடலைத் தேட கிடைக்காமையால், மூலன் உடலோடு திருவாவடுதுறை சென்று, அருள்மிகு மாசிலாமணி நாதர் கோவிலின் பின்புறமுள்ள படரரசமரத்தினடியில் நிட்டையிலமர்ந்தார். ஆண்டுக்கொருமுறை நிட்டை நீங்கி ஒருமந்திரம் கூறி மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து மூவாயிரம் மந்திரங்கள் வழங்கிச் சமாதி நிலையைப் பெற்றுத் தம்முலகுக்கேகினார். இந்நூலுள், தான் நந்தி தேவரிடம் பெற்ற உபதேச மூலம் உணர்ந்த நவ ஆகமங்களையும் தமிழில் ஆக்கித் தந்துள்ளார். பாயிரம் கூறிய பின் நவ ஆகமங்

களை 'ஒன்பது தந்திரங்கள்' என அமைத்து மூவாயிரம் பாடல்களை வழங்கியுள்ளார். இந்நூலுக்குத் 'திருமந்திரமாலை' என்ற பெயரும் வழங்கப்பட்டு வருகிறது.

சைவ சித்தாந்தம் : சைவம், சித்தாந்தம் - சைவசித்தாந்தம். இதன் பொருள் சைவக்கொள்கை என்பதாகும். ஆகமங்கள் ஒன்பது எனவும், அதிலிருந்து விரிந்தவை இருபத்தெட்டு ஆகமங்கள் எனவும் அவை இருபத்தெட்டும் சைவம் இரௌத்திரம் ஆரிடம் என மூவகைப்படுமெனவும் இங்ஙனம் ஆகமங்கள் பலவாயினும் வேதாந்த முடிவாகிய சித்தாந்த உணமை ஒன்றேயாக முடிவுபெற அதுவே சுத்த சைவமாகும் என அறிவிக்கப் பட்டுள்ளது. இருக்கு, எசுர், சாம, அதர்வணம் என வேதஙகள் நான்கு. அவற்றில் விதித்தன வற்றை மேற்கொண்டும், விலக்கியனவற்றை நீக்கியும் அவ்வாறே ஒழுகுவதே வேத அல்லது வேதாந்த நெறியாம். அவ்வாறு ஒழுகும் ஒருவன் (ஜீவாத்மா) இறைவனுடன் (பரமாத்மா) இரண்டறக் கலப்பான் என்றும், (ஆன்மாவும் இறைவனும் வெவ்வேறு என்னும் த்வைத நெறி) ஜீவாத்மா வேதநெறி கடைப் பிடிக்க ப்ரம்மத்தை உணரும். ப்ரம்மம் உணர்ந்தவன் பிராம்மணன் அல்லது ப்ரம்மனாவான். பிரம்மனான ஜீவாத்மாதான் பரமாத்மாவாகும் என்றும். (ஆன்மாவின் முதிர்ச்சியே) இறைவன் இரண்டும் வெவ்வேறல்ல என்னும் அத்வைத நெறி) வேதாந்திகள் இருவேறு கருத்துக்களுடன் உள்ளனர். சித்தாந்த நிலையே வேறு. சித்தம் என்பதற்கு மனம், திடம் எனப் பொருள்களுண்டு. இறைவன் உண்டு என வாதிடுவது அறியாமை. இல்லை என வாதிடுவது மூடம். எனவே மனம், அறிவின் துணைகொண்டு சிந்தித்து உலகமும், உலக உயிர், உயிரல் பொருள்களும் தானாகத் தோன்றவோ, தமது விருப்பம்போல் வாழவோ விரும்பியபோது மடியவோ முடியவில்லை. என்றாலும் இவை இடைவிடாமல் நடந்துகொண்டேயிருக்கிறது. ஒரு பானையைப் பார்த்தால் மண், நீர், திரிகை, குயவன் ஆகியோரை எண்ணுவோம். திரிகையில், நீர்விட்டுக் குழைந்தமண், உருவாக்கப்பட்டுச் சூளையிலிட்டு, வந்துள்ளதை அறிகிறோம். ஆயினும் மண், நீர், திரிகை, சூளை இருப்பினும்குயவன் என்ற ஒருவன் இல்லையென்றால் இவை செயல்படாது-உருவாகாது. அதுபோலவே, தோன்றி, நின்று, அழிவுறும் அனைத்தும் தானே தோன்றாமல் ஒருவனால் தோற்றுவிக்கப்பட்டு, தோன்றியவற்றை வகுத்திட்ட காலம்வரை நிற்கத் துணை நின்று, முடிவில் அழித்துவிடும் ஒருவன்-ஒரு ஆற்றல் இருத்தல் நிச்சயமாய் வேண்டும். அவ்வொருவனே இறைவன்-ஈசன்-கடவுள்-பகவான்-பதி எனப் பெயர்களில் கூறப்படுபவனாவான் என்பதே சைவ சித்தாந்தக் கொள்கையாம்.

சித்தாந்த முடிவு: சித்தாந்தத்தின் முடிவு முப்பொருள் உண்மையாம். அவை இறை(பதி) உயிர் (பசு), தளை (பாசம் அல்லது மலம்) என்பனவாம். இம்மூன்றும் நிலையானவை-அழிவில்லாதவை-என்றும் உள்ளவை. இவற்றுள் இறைவன் வரம்பில் ஆற்றலும் நிறையறிவும் பிறப்பிறப்பற்றும். ஐந்தொழில் புரிந்தும் திகழ்பவன் ஆவான். உயிர்கள் முயற்சிக்குதக்க ஆற்றலும் சிற்றறிவும் பிறப்பிறப்புகட் குட்பட்டும் உணர்த்த உணரும் அறிவால் செயல்பட்டும் திகழும். தளைகள் சடப் பொருள்கள். உயிர்களிடத்துச் சார்ந்து தன்னையுணர்த்தும். பதி பசு பாசங்களில் நடுவணது எய்த இருதலையும் பொருந்தும். அதாவது உயிர்கள் உய்தி பெறுதல் வேண்டும் என்னும்கருணையால் இறைவன் அவ்வுயிர்களின் முற்பிறவியின் இருவினைகளை யனுபவித்துக் கழிக்கப்படைக்கிறான். அவ்வுயிர் படைப்பைப் பெறும்போது அதனுடன் ஒடுங்கியுள்ள ஆணவமும் உயிர்ப்புறும். அது நீங்காத வரை இறையருள் கைகூடாது. அது தன்னைக் காட்டாது மறைத்து உயிரைத்தன் வயப்படுத்திக் கொள்ளும். அதை உயிரறியும் பொருட்டு இறைவன் கன்ம மாயா மலங்களை ஊட்டித் தனு (உடல்) கரண (உறுப்பு) புவன (உலகம்) போகம் (அனுபவிப்பவை) இவற்றின் மயக்கம் நீங்கப்பெற்றும் காரியங்கள் செய்து தன் முடிவுப்படி நடவாத நிலையறிந்து கருமத்திலிருந்து விடுபட்டும், எஞ்சியுள்ள ஆணவம் எது! அல்லது யார்? இதுவும் அவற்றைப் போன்று நம்மை ஏமாற்றுவதுதான். உண்மையில் இறைவன் திருவருள் ஒன்றே மெய்-உறுதி-துணை என்பதறிந்து அகந்தையற்ற நிலையில் இறைவனை எய்த அருட்குரு உபதேசம்பெற்று, மீண்டும் பிறந்திறவாத்தன்மை பெற்று இறைவனது திருவடி நீழலடையும் என்பது தெளிந்த சைவ சித்தாந்த முடிவாம். வினைகளுக்கேற்பப் பிறப்பமையும் என்றும் பிறப்பில் வினைகளை ஆற்றுகிறோம் என்றும் கூறிவிட்டுப் பிறவாநிலை யெய்துதல் எவ்வாறு என்ற சந்தேகம் எழுவதுஇயல்பு. குருவருளைப் பெற்று ஞானம் பெற்ற ஒருவர் புண்ணிய பாவங்களை ஆக்கித்தரும் வினைகளை ஆற்றினாலும் புண்ணியபாவம் என்ற விளைவுகளை அழித்து விடுகிறார் மற்றவர் அனுபவிப்பார்கள். பாவத்தால் புண்ணியமோ புண்ணியத்தால் பாவமோ அழிவதுமில்லை-அழிப்பதுமில்லை. அவற்றை மாறி மாறி அனுபவித்தே கழிக்க வேண்டும். ஞானி பாவம் செய்ய மாட்டான். ஆனால் ஞானாசிரியரிடம் உபதேசம் பெறுமுன் செய்த பாவங்கள் உண்டே! அவை அவனது உயர்ந்த ஞான நெருப்பில் பொசுங்கிப் போய்விடும். இதுவே, அருணகிரிநாதர் திருமங்கையாழ்வார் போன்ற அடியார்கள் வாழ்க்கை வரலாறுகள் சான்றாக நின்று, உணர்த்துகின்றன என்பதைத் தெளிந்து அறிகிறோம்.

திருமந்திரத்தில் பதி இயல்பு : இறைவன் கருணையுடையவன் ஆவன். கருணை அறக் கருணை மறக்கருணை என இருவகைப்படும். தவறு செய்பவர் திருந்தும்பொருட்டு அவர்களைத் தண்டிப்பவர்; அன்னாருக்குக் கொடியவராவார். எடுத்துக்காட்டாக குற்றவாளிகளைப் பிடித்து அரசு தண்டனை வழங்கும் போது குற்றவாளிக்கு அரசன் கொடியவன்.

ஒழுங்காகப் படிக்காத-கீழ்ப்படிதல் இல்லாத மாணவனைத் தண்டிக்கும் ஆசிரியர் அன்னார்க்குக் கொடியவர். தகாத செயல்புரியும் தனயனைத் தண்டிக்கும் தந்தை தனயனுக்குக் கொடியவன். அதுபோல நல்லன மேற்கொண்டொழுகாது அல்லனவற்றில் ஈடுபடும் ஆன்மாக்களுக்கு இறைவன் 'தீயினும் வெய்யன்' ஆவான். என்றார். நீரின் இயல்பு தண்மை-குளிர்ச்சி. அதனினும் தன்மையுடையவன் இறைவன். யார்க்கு? தன்பால் அன்பு செலுத்தும் அடியார்க்கு என்பதை (நீரினும்) 'புனலினுந் தண்ணியவன்' என்றார். தண்ணீரின் இயல்பு குளிர்ச்சியே என்றாலும் குளிர்ப் பனிக்காலங்களிலும் உடல்நலம் குன்றிய காலங்களிலும் வெந்நீராக ஆக்கிப் பயன்படுத்துகிறோம். எவ்வாறு இயற்கை மாறுபாட்டையும், உடல் நலக் குறைவையும் கருதிச் சுடவைக்கப்பட்டதால் தண்ணீருக்கு வெப்பம் ஏற்பட்டதோ அதேபோலத் தீமைபொருந்திய உயிர்களைக் காப்பாற்ற இறைவன் வெம்மையுடையவனாவான் என்பதை 'ஆயினும் ஈசன் அருளறி வாரில்லை' என்றார். உயிர்களை வருத்துவதும்-வாட்டுவதும் அவை திருந்தவே என்னும் மறக்கருணையேஎன்பதுதான்கருத்து. எனவே ஈசன்அன்பர்க்குத்தண்ணியன்ஆவான். வம்பர்க்கு வெய்யவன் ஆவான் என்பது உறுதி. குழந்தையைக்காமகுரோதிகள் பற்றாது அதற்குத் தன்னலமோ, விருப்பு, வெறுப்போ கிடையாது. ஒரே வழி விருப்பு வெறுப்பு ஏற்படினும் அதை நிலை பெறுத்தாமல் மறக்கும் இயல்புடையது. இத்தகைய குழந்தையைவிட நல்லவன் சிவன் என்பதை சேயினும் நல்லன்' என்கிறார். தன்பால் அன்பு செலுத்தும் அருகிலுள்ளவன்என்பதை 'அணியன் நல்அன்பர்க்கு' என்றார். ஒருதாய் தன் குழந்தை அயர்வோடு உறங்கினும், பாலூட்டும் நேரத்தை எண்ணி எழுந்து ஊட்டுவாள். சேய்க்கு வரும்நோய்க்கு (இளம் குடல் பெறாது என்பதால்) தானே மருந்துண்பாள். அதுபோலவே இறைவன் உயிர்களின் தன்மைக்கு ஏற்ப அவ்வவற்றின் பக்குவமறிந்து உதவுகிறார் என்பதை 'தாயினும் நல்லன்' என்றார். யாரவர்! அவனையே 'பின்தாழ் சடையோன்' என்றார். இனித் திருமந்திரப் பாடலைக் காண்போம்.

**'தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்**
**ஆயினும் ஈசன் அருளறி வாரில்லை**
**சேயினும் நல்லன் அணியன்நல் அன்பர்க்கு**
**தாயினும் நல்லன்பின் தாழ்சடையோனே'**

அடுத்துப் பிறப்பு இறப்பு இல்லாதவரும், மயிற்பீலியை அணிந்தவரும், பேரருளாளரும், எல்லோருக்கும் இன்பத்தையே அருளிச் செய்வதில் இடையீடுபடாதவரே இறைவன் என்றும், அவ்விறைவனைத் தொழுங்கள், தொழுதால்அவன் திருவடியை மறவாது அஞ்ஞானத்திலிருந்து விலகி ஞான நெறியடையலாம் என்றும் அவன் திறம்கூறும் பாடலாவது:

'பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமும்ஆமே' என்பதாம்.

அடுத்து இறைவனை நாம் அடையமுடியுமா? அவன் வருவானா? அவன் மூலம் என்ன பயன் விளையும்? என்றெல்லாம் உலகவர் கேட்பர். அவர்களுக்கு உலகியலோடு பொருந்திப் பதி நிலையுணர்த்தியமை அறிந்து இன்புறத் தக்கதாகும். அதனைப் பார்ப்போம். வானம் வறக்குமானால் வாடுவான் உழவன். வாடி வருந்திக் கொண்டிருக்கும் உழவனை வானம் அழைக்கும். எவ்வாறு! வேளாண்மைக்கு வேண்டியமழையைத் தரப் போவதாக மின்னி இடிஇடித்துக் கூப்பிட்டுக் கூறும். உடனே நிலத்தைப் பக்குவப்படுத்துவான். எதிர்பார்த்தது போல் மழை பெய்து நிலமும் விளைந்து துன்பம் நீங்கி இன்பம் அடைகிறான். அது போல இறைவனும் அருள்தர நம்மை அழைப்பானா! எனச் சிலர் கேட்பர். அழைப்பார். ஆனால், வானத்தைப் போல அன்றிப் பசுவைப் போல அழைப்பார். பசு தன் கன்றின் பசியறிந்து ஊட்டும். கன்றும் தாயைக் கூவியழைக்கும். இரண்டும் ஈயவும் ஏங்கவும் ஒத்திருக்கும். வானத்தை அழைத்தால் பெய்யாது. பெய்யும்போது விதைக்காவிட்டால் விளைவு கிடையாது. ஆனால் இது அவ்வாறின்றி கன்று மறந்தால் பசு அழைத்துப் பாலூட்டியும், கன்று பசித்து அழைத்தால் பாலைச்சுரந்தும் கன்றுக்கு பாலைத் தவறாமல் கொடுத்து வளர்ப்பது போலவே இறைவன் தான் பிறப்பித்த உயிர் தன்னை மறந்து மலக்கட்டிலிருக்கும்போது சிறிது சிறிதாக நீங்கச் சிற்றறிவு வழங்கித் தான் உதவியும், அவ்வுயிர் அதைப் பெற்று முயன்று பேரறிவு பெற குருவை நாடி உபதேசம் பெற விரைந்து வந்து அருளை வழங்குபவனாவான். எனவே, பயன்கருதாத பணி (நிஷ்காமியகர்மம்) மேற்கொண்ட அடியார்களுக்குப் பால் நினைந்தூட்டும் தாய் போலத்தானே அழைத்தும், வீடுபேறு மற்றும் உயர்நிலை வேண்டி வழிபடும் (காமியகர்மி) அன்பர்கட்கு அருள் வழங்கியும் அருள்பவனாவான் எனக் கூறுகிறார். இனி பாடலைக் காணபோம்.

**'வானின் றழைக்கும் மழைபோ லிறைவனும்**
**தானின் றழைக்குங்கொல் லென்று தயங்குவா**
**ரானின் றழைக்கு மதுபோலென் நந்தியை**
**நானின் றழைப்பது ஞானம் கருதியே'**
என்பதாகும்.

பசு இயல்பு: பசு-உயிர்-ஆன்மா - ஆவி எனப் பெயர்பெறும். இறைவன் ஒருவன், உளன். அவன் திருவடியடைதலே பிறவியெடுத்ததன் பயன் என்பதை பசு அறிய முடியாது.பாசக்கட்டில் நிற்கும் இயல்புடையதாம். அதனால் பசுபோதம் (கொள்கை) மாறிப் பதி போகத்தை எய்த வேண்டும் என்பதை ஒவ்வொருவரும் அறிந்து உய்திபெற விரும்பிப்பசு இயல்புகளை உணர்த்தியுள்ளார். பசு போகத்தால் சினத்தல் முதலிய ஒன்பது குணங்களும் விளையும். அதனால் செருக்கு உண்டாகும். அச்செருக்கு இறைவனை அறியமுடியாதவாறு மறைக்கும் என்கிறார். ஒருவன் தான் விரும்பிய பொருளைப் பெறாத போதும்; அதை வேறொருவன் கைக்கொண்டபோதும், அவைகள் தம் விருப்பத்திற்கு மாறாக நடந்த

போதும் ஏற்படும் சினம் 'கன்றலும்' எனக் கூறினார். பொருளையும், போகத்தையும் (பதவிகள், மாதரின்பம்) எண்ணுதலை 'கருதலும்' எனக் கூறினார். அங்ஙனம் எண்ணிய எண்ணங்களை எப்படியாவது நிறைவேற்றிக் கொள்ளவும், அப்பொருள்களை அடையவும் மேற்கொள்ளும் முயற்சியை 'கருமஞ் செய்தல்' என்றார். உயிர் உடலில் தங்குவதற்காகப் பசித்தபோது அளவறிந்து உண்ணாமல் அதிகமாக உண்ணுதலைத் 'தின்றல்' என்றார். நாச் சுவைக்கு உட்பட்டுப் பலவிதப் பலகாரங்கள் உண்டலும், ஏனைய பொறிகளுக்கு உட்பட்டு பல பொருள்களை பல விதங்களில் அனுபவித்தலும்' 'சுவைத்தல்' என்றார். தன் கருத்துக்கு மாறுபட்டவர்களைப் பகைத்து வருத்தவும் அழிக்கவும்முயலுதலைத் 'தீமைசெய்தல்' என்றார். பழி பாவங்களில் ஈடுபட்டு குறைபட (பிறர் பழிக்கும்படி) வாழ்தலை 'பின்றல்' என்றார். உலகியல் (அரசியல்) பணிகளை உலகோர் பாராட்ட வாழ்பவர்கட்குத் தன் மனதில் ஏற்படும் செருக்கைப் 'பிறங்கல்' என்றார். தன்னைத்தானே புகழ்ந்து கூறுதலை, 'பெருமை கூறல்' என்றார். எனவே இவ்வொன்பது குணங்களும் உயிரினிடத்தில் இயல்பாகவே பொருந்தி அவையே உ று தி ப் பொருள்கள் என எண்ணும்படிச் செய்வதே' 'பசு போதம்' எனப்படும். இவ்வியற்கைக் குணங்களை விட்டால் ஒழிய இறைவனை அடைய முடியாது என உறுதியாக உணர்த்தியுள்ளார். இனி மந்திரத்தைக் காண்போம்.

'கன்றலும் கருதலுங் கருமஞ் செய்தலுந்
தின்றலுஞ் சுவைத்தலும் தீமை செய்தலும்
பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்
என்றிவை யிறைபா லியற்கை யல்லவே''.

உலகத்தில் இருள் நீங்குவதும், ஒளி தோன்றுவதும் இயல்பாதலை அறிகிறோம். அதுபோல் அறியாமை அல்லது அஞ்ஞானமாகிய இருள் நமக்குள் உள்ளது. இவ்விருளகன்று அறிவு அல்லது ஞானம் என்னும் ஒளியைக் காண வேண்டும் என்பதை உயிர் அறியமுடியாதபடி மலம் அதனைக் கட்டுப்படுத்தியுள்ளது. மலக் கட்டால் அறியாது கிடத்தலை, 'விடிவது அறியார் வெளிகாண மாட்டார்' என்றார். முன் செய்த நல்வினைப் பயனால் (அருள் விளக்கத்தால்) விடிவதையும்வெளிக்காணப் பெறுவதையுங் கூட அறிந்து அனுபவிக்க மாட்டார்கள் என்பதை 'விடியல் வெளியில் விழிக்கவும் மாட்டார்' என்றார். அழகைக் கண்ட கண் அதில் பற்றுக் கொள்ளும். பற்றுக் கொள்ளவே மனம் அதன்வழி சென்று தீமைக்குள்ளாகும். எனவே இமையை மூடிக்கட்டிமனத்தை அடக்குங்கள். இமைகளை மூடியதால் புறம்போக முடியாத மனத்தை உள்முகமாகத் திருப்பினால் பரஞானம் கைவரப்பெறுமாதலின் 'கூடியதோருண்ணிமை கட்டுமின் 'காண்மின்' என்றார். அந்த நிலையடைவதே விடியாமையாகிய அஞ்ஞானம் நம்மைப் பற்றாது தடுத்தூக்காக்கக்



கூடிய விளக்காகும் என்பதை 'விடியாமை காக்கும் விளக்கது வாமே' என்றார். இதன் மூலம் உலகவர் விடியல் வரப்போவததையும் ஞானவெளி தோன்றப் போவதையும் கூட அறிய மாட்டார். நீங்கள் உங்கள் மனத்தையும், கண்ணையும் புறம் செல்லாமல் கட்டினால் உங்களுக்கு ஞானவெளி தெரியும் என்பதி கருத்து. இத் திருமந்திரம்:

''விடிவ தறியார் வெளிகாண மாட்டார்
விடியல் வெளியில் விழிக்கவும் மாட்டார்
கடியதோர் உள்நிமை கட்டுமின் காண்மின்
விடியாமை காக்கும் விளக்கது வாமே''.

எனவே, பசுவின் இயல்பு பாசத்தில் கட்டுப்பட்டிருப்பதே எனவும், முன்னூழ் வலியாலும் தனது விடாமுயற்சியாலும் பாசக்கட்டுக்களை அறிந்து விலக்க முயன்றால் இறைவன் இரங்கி அருட்குருகாட்டி உய்விப்பான் என்பது உறுதி.

மாயை என்பது என்ன! குடம், கலயம் போன்ற பொருள்களுக்கு மண்ணைப் போன்றது. அதாவது அவை செய்வதற்கு முதற் பொருள் மண். அதுபோல தனு, கரணம், புவனம், போகங்களாகிய உலகத்திற்கு முதற் காரணம் எதுவோ அதுவே மாயை.

கன்மம் என்பது என்ன! தேவர் முதல் தாவரம் ஈறாகிய எழுவகை உடம்புகளை உயிர்கள் எடுப்பதற்குக் காரணமாய், அவ்வுடம்புகளைப் பெற்றமாத்திரமே அன்னபானாதிகளைக் கொள்ளுதல், மலமூத்திரங்களை விடுதல் ஆகியவைகள் நிகழும்படி வியாபித்து நிற்பதாய், அன்னபானாதிகளைப் பெறும் பொருட்டுச் செய்யும் தொழில்களும், அவற்றால் வரும் விருப்பு, வெறுப்புக்களும், அன்னதானம் வித்யாதானம் முதலிய நல்வினைகளும் கொலைகளவு முதலிய தீவினை

களும்செய்வதால்இன்ப துன்பங்களையளிக்கும் புண்ணிய பாவங்களாய் படைக்கும் காலத்துப் பசுக்களைத் தொடர்ந்து கூடுவதாகும்.

ஆணவம் என்பதுஎன்ன? ஒரே முதலாய், அழியாததாய் ஏனைய மலங்கட்கெல்லாம் காரணமாய் எப்பொருளின் இயல்பினையும் தன்னையும் காட்டாது மயக்கி நின்று பசுக்களால் இயற்றப்படும் நிஷ்காமியச்சிவ புண்ணியங்களால் பரிபாகமடையுமளவும் அவரது அறிவினை முற்றும் மறைப்பதாகும்.

திரோதாயி அல்லது திரோதை என்பது என்ன? ஆணவ மலத்தால் மறைபட்டுள்ள பசு (உயிர்)விற்கு அந்த ஆணவமலம் பரிபாகமுறும் பொருட்டு அதனை நிலைக்களமாகக் கொண்டு நின்று செலுத்தும் ஆதிசக்தியாகும். அதை மலமென்றது உபசாரமாகும். அச்சக்தி சிவபெருமான் திருவடியைப் பெறும்பொருட்டுப் பக்தி செலுத்துகின்ற பசுக்களுக்கு அவ்வாறே திருவடிப் பேற்றிற்கு உதவுதலாம்.

மாயேயம் என்பது என்ன! கலை முதல் மண்முடியவுள்ள தத்துவங்களாகத் தோன்றி ஒடுங்கும். விஞ்ஞானகலராக விளங்கும் அட்டவித்யேஸ்வரருள் தலைவராகிய அனந்தரால் கலை காலம் நியதி என்ற முத்தத்துவங்களும் அவற்றுள் கலையிலிருந்து வித்தையும் வித்தையிலிருந்து அராகமும் தோன்றும். பிரளயாகலருள் தலைவராய ஸ்ரீகண்ட ருத்திரரால் கலையில் மூலப்பிரக்ருதியும் குணதத்துவமும் குண தத்துவத்தில் புத்தியும், புத்தியில் அகங்காரமும் அகங்காரம் சத்துவ ரசோ தமோ குணங்களுமாகத் திகழ்கின்றன. சத்துவம் தைசதம் வைகாரி பூதாதிகளாகும். ரசோ வாக்குமுதலாகியவைவைகாரியாகும். தாமதம் அறியாமையாகும். இவைகளைப் பற்றித் திருமூலர் கூறியுள்ளமையைக் காண்போம்.

ஆன்மா தன்னுடன் நிலைபெற்றுத் திகழும் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்ற ஐவகை மலங்களிற் கட்டுண்டு கிடப்பதால், போகத்திலேயே முனையும் இயல்புடையது. அறிவைப் பயன்படுத்திச் சரியை, கிரியை, யோக, ஞானங்களால் அவற்றை நீக்க வேண்டும். அசற்சீடன்(அசடன்) அவ்வழியை அறியமாட்டான் என்பதை 'மன்னும் மலமைந்தும் மாற்றும் வகையோரான்' என்றார். காமம், குரோதம், மோகம், லோபம், மதம் மாற்சர்யம் என்னும் உட்பகைகள் ஆறையும் நீக்க முயலாது அதில், அழுத்துடவன் அசற்சீடன் என்டதனைத் 'துண்ணிய காமாதி தோயும் தொழில் நீங்கான்' என்றார். ஒரு பொய்யை மறைப்பதற்கு அதற்கு ஆதரவாகப் பல பொய்களைத் தொடர்ந்து கூறும் இயல்புடையவன் என்பதைப் 'பின்னிய பொய்யன்' என்றார். பிறப்பும் இறப்பும் மாறிமாறி வருவன வாதலின் அவற்றிற்கு அஞ்ச வேண்டியது இன்றியமையாததாகும். அசற்சீடன் அதற்கு அஞ்ச மாட்டான் என்பதை 'பிறப்பிறப் பஞ்சாதான்' என்றார். இத்தகையவன் உண்மையறிந்த ஞானிகளுக்கு அப்பாற்பட்டவனாவான். அதாவது



தான் ஞானம் பெற்றுப் பிறவாமை எய்த வேண்டும் என்பதை எண்ணிச் சற்குருவை நாடவோ சத்சங்க மடையவோ, சற்காரியங்கள் பேற்கொள்ளவோ மாட்டான். ஆதலின் அவனை 'அன்னிய னாவான்' என்றார். அன்னியன் மாற்றான். அசற்சீடன்தான் முயற்சியெடுக்காமலிருப்பதோடு, தன் முயற்சியிலீடுபடும் நற்சீடர்களையும், சற்குருவையும் பகைத்துக் கேலியும் கிண்டலும் செய்யும் பகைகுணமும் பெற்றவனாவான். இனி மந்திரத்தைப் பார்ப்போம்.

'மன்னும் மலமைந்தும் மார்றும்வகையோரான்

துன்னிய காமாதி தோயும் தொழில் நீங்கான்

பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதான்

அன்னிய னாவா னசற்சீட னாமே' என்பதால்''

முடிவுரை: இதுவரை கூறியவற்றால் உண்மைப்பொருட்கள் பதி பசு, பாசம்என்பது தெளிவு. மூன்றனுள் நடுநின்ற பசு பாசத்திலிருந்து நீங்கவேண்டும் என்பதும் தெளிவு; அப்பசு பதியைக்கூட வேண்டும் என்பதும் தெளிவு: இதைத் தெளிந்த பசு (உயிருடையவன்), சற்குருவினிடம் உபதேசம் பெற்றும் அடியார் நடுவுள் இருந்தும், சரியை, கிரியை யோக, ஞானங்களுள் ஒரு நெறி மேற்கொண்டும், முயல 'பதியருள்' கைகூடும். கூடவே மீண்டும் பிறவாமல் நிலைபெற்று ஈசனடி வீற்றிருக்கலாம் என்பதும் தெளிவு.

# இராமானுசர்

'நயவுரை நம்பி'

டாக்டர் உலகண்ணல்



''அரியநம்பி ஆயிரம் பேருடையான் அன்னோன் உரியநம்பி அன்புடையார் எல்லாம் தெரியின் பெரியநம்பி போலொருவர் பேருலகில் இல்லை அறிஞன் இராமானுசன்.''

தமிழகத்தின்கண் தொண்டைநாடு சான்றோர் பலர் தோன்றியதாகும். உலகம் போற்றும் பெரும்புகழையுடைய திருக்கச்சி திருவேங்கடம் முதலிய சிறந்த பல திருப்பதிகளை உடையது.

## திருப்பெரும்பூதூர்

இந்நாட்டின்கண் வளங்களாற் சிறந்த ஊர்கள் பல ஆயிரம் உள. அவற்றுள் திருப்பெரும்பூதூர் என்பதும் ஒன்று. அவ் ஊரில் உள்ள மக்கள் தென்மொழி நூல்களையும் வடமொழிக்கலைகளையும் கற்றுணர்ந்தவர்கள். அவ் ஊரிற் பல அந்தணர்கள் இன்புற வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் தமிழ் மறையையும் வடமொழி மறையையும் நன்கு உணர்ந்தவர்கள்; நெடுமாலிடத்தில் நீங்காத அன்புடையவர்கள்; எல்லா உயிர்களிடத்திலும் அன்பும் அருளும் செலுத்தும் இயல்புடையவர்கள்.

## இராமானுசர் பிறப்பு

அவர்களுள்.. ஆசூரிகேசவப் பெருமாள் என்னும் அருங்குணச் செல்வர் ஒருவர் இருந்தார். அவர் அன்பு அருள் அடக்கம் வாய்மை என்னும் அருங்குணங்களுக்கு இருப்பிடம். ஆளவந்தார் திருவடிகளையடைந்து அவர் அருளைப் பெற்ற அன்பர்களுள் ஒருவராகிய பெரிய திருமலைநம்பி என்பவர் அக்காலத்தில் வேங்கடத்தில் வாழ்ந்தார். அவருக்குப் பூப்பிராட்டியார் என்றும் பெரிய பிராட்டியார் என்றும் திருப்பெயர்கள் கொண்ட இரண்டு தங்கையர்கள் இருந்தனர். அவர்களுள் பூப்பிராட்டியார் என்பவரை ஆசூரி கேசவப்பெருமாள் மணம் கொண்டார். பெரியபிராட்டியார் என்பவரை மழலை மங்கலத்தில் வட்டமணிக்குலத்தில் தோன்றிய கமலநயனப்பட்டார் என்பவர் மணந்து கொண்டார். அவர்களுள் பூப்பிராட்டியார் கருவில் உலகம் உண்டருள்ய பெருமாளை எப்பொ.ழுதும் நீங்காமல் நின்று

''சென்றால் குடையாம் இருந்தால்சிங்
காதனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்-என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம்
அணையாம் திருமாற் கரவு' புல்கும்

என்றபடி அப்பெருமானுக்குப் பலவகையாகிய தொண்டுகளைப் புரிந்து கொண்டிருக்கும் ஆதிசேடன் வந்து அடைந்தனன்.

அம்மங்கை நல்லார் ஆதிசேடனைத் தமது வயிற்றில் தாங்கியுள்ளார் என்பதனை அனைவருக்கும் உணர்த்துவது போல அச் செல்வியாருடைய திருமேனி அவ் ஆதிசேடனுடைய நிறம் போல வெளுத்தது. அவ் வருங் குண நங்கையாருடைய அகட்டினின்று சாலிவாகன சக ஆண்டு தொள்ளாயிரத்து முப்பத்தொன்பது பிங்கள ஆண்டில் சித்திரைத் திங்களில் வளர்பிறை பஞ்சமிதிதி திருவாதிரை நாள் கூடிய நல்லோரையில் ஒரு மைந்தர் தோன்றினார். அச்செய்தியைத் திருமலையில் உறைபவராகிய பெரிய திருமலைநம்பி என்பவர் கேட்டுத் திருக்கச்சிக்கு வந்து ஆசூரிகேசவப் பெருமாளைக் கண்டு அவருக்குத் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்தார். பின் அம் மைந்தரைக் கண் குளிர நோக்கி ஆசூரிகேசவப் பெருமாளைப் பார்த்து இம்மைந்தன் இளைய பெருமாளை (இலக்குமணன்)ப் போல நம் பெருமாளிடத்தில் மிக்க அன்புடையவனாகி விளங்குவான். இவனுக்கு 'இளையாழ்வான்' என்னும் திருப்பெயரை இடுவீராக' என்று கூறினர்.

ஆசூரிகேசவப் பெருமாளும் இளையாழ்வார் என்னும் திருப்பெயரை அம்மைந்தருக்கு இட்டார். அம்மைந்தருடைய முகப்பொலிவு அவரது மனம் அன்புக்கு உறைவிடமானதாம் என்பதனைக் காட்டியது. அவருடைய கண்களின் தோற்றம் காலத்தில் தண்ணருள் மழையைச் சொரிய வந்த மேகம் இவர் என்பதனை உணர்த்தியது. அவருடைய செந்தாமரை மலர் திருவடிகளின் காட்சி பல அடியவர்கள் தங்கள் முடியில் அணியும் மலராம் என்பதனைத் தெரிவித்தது. அம் மைந்தரை ஈன்ற பூப்பிராட்டியார் இலக்குமணரைக் கையிலேந்தி மகிழ்ந்த சுமித்திரையைப் போல அம் மைந்தரைக் கையிலேந்திப் பல முத்த மாலையை அளித்து மகிழ்ந்தார்.

இளையாழ்வார் என்னும் திருப்பெயரையுடையவர் தக்க பருவத்திற் கலைகளைக் கற்கத் தொடங்கித் தென்மொழி நூல்களையும் பல வடமொழிக் கலைகளையும் நன்கு கற்றுணர்ந்தார். இளையாழ்வார் இல்லறத்தை மேற்கொள்ள எண்ணி எழில் மிக்க மாதரசியார் ஒருவரை மணந்து கொண்டார். அக்காலத்தில் திருக்கச்சிக்கு அருகில் உள்ள திருப்புட்குழி என்னும் பகுதியில் யாதவப் பிரகாசர் என்னும் துறவியார் ஒருவர் இருந்தார். அவர் பல கலைகளையும் நன்கு கற்றுணர்ந்தவர். மாணாக்கர்கள் வேதாந்த நூற்கடலைக் கடத்தற்கு அவர் சிறந்த புணையாய் விளங்கினார். இளையாழ்வார் அவருடைய கலையறிவின் மேன்மையைப் பலர் சொல்லக் கேட்டு அவர்பால் சென்று, வேதாந்த நூல்களைக் கற்று வரலானார்.

கமலநயனப்பட்டரை மணந்த பெரிய பிராட்டியார் என்பவரும் இளையாழ்வாருக்குப் பின் ஒரு மகனை ஈன்றார். பெரிய திருமலை நம்பி என்பார் அங்கும் சென்று, கமலநயனப் பட்டரை வாழ்த்தி, 'நீர் உம்முடைய மைந்தனுக்குக் 'கோவிந்தன்' என்னும் திருப்பெயரை இடுக,' என்று கூறினார். கமலநயனப்பட்டரும் அவ்வாறே அம்மைந்தருக்குக் 'கோவிந்தன்' என்னும் திருப்பெயரை இட்டார். கோவிந்தன் என்னும் திருப்பெயரையுடைய அம்மைந்தரும் கற்க வேண்டிய பல நூல்களையும் கற்றுணர்ந்து, பதினாறு ஆண்டுகள் ஆன போது ஒரு நல்லியல் மாதரை மணந்து கொண்டார். கோவிந்தன் என்னும் அரிய பெயர் உடைய அம்மைந்தர், பிறகு வேதாந்த நூல்களைக் கற்க விரும்பினார். அப்போது இளையாழ்வார் திருப்புட் குழியில் உள்ள யாதவப் பிரகாசரிடம் வேதாந்த நூல்களைக் கற்கின்றார், என்பதனைச் சிலரால் அறிந்து, தாமும் திருப்புட் குழிக்குச் சென்று யாதவப்பிரகாசரிடம் வேதாந்த நூல்களைக் கற்கலானார்.

## யாதவப் பிரகாசர் சூழ்ச்சி

யாதவப் பிரகாசர் ஒருநாள் 'சத்யம் ஞானம் அனந்தம் ப்ரஹ்மம்' என்ற வேதத் தொடர் ஒன்றுக்கு அத்துவிதப் பரமாகமப் பொருள் கூறினார். இளையாழ்வார், அதை மறுத்து விசிட்டாத்துவிதப் பரமாகப்பொருள் கூறினார். யாதவப் பிரகாசர், இதைக்கேட்டு மிக்க சினம் கொண்டு, இளையாழ்வாரை நோக்கி 'நாம் கூறும் பொருளை மறுத்துக் கூறுதல் உமக்கு முறையில்லை' என்று கடிந்து கூறினார். இளையாழ்வார் அமைதியாக இருந்துவிட்டார்.

மற்றொரு நாள் யாதவப்பிரகாசர் எண்ணெய் இட்டுக்கொண்டு நீராடுவதற்காக, இளையாழ்வார், அவர் தலையில் எண்ணெய் இட்டுத் தேய்த்துக் கொண்டிருந்தார். அப்போது யாதவப் பிரகாசர் வேதத்தொடர் ஒன்றுக்கு தாமரைமணாளன் 'குரங்கின் பின்புறம் போலச் சிவந்த கண்களை உடையவன், 'தஸ்ய யதாகப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணி' என்று பொருள் கூறினர். அதனைக் கேட்டதனால் இளையாழ்வாருக்கு மனத்தில் துயரம் உண்டாயிற்று.

அவர் கண்களின்று நீர் பெருகியது. அந்நீரின் ஒரு துளி யாதவப்பிரகாசர் தொடையில் வீழ்ந்தது. அஃது அவர் தொடையைத் தீப் போலச் சுட்டது. அதனால், யாதவப் பிரகாசர், பதறித் திரும்பி, நிமிர்ந்து இளையாழ்வார் முகத்தைப் பார்த்து, அவர் கண்களில் நீர் பெருகி வருதலைக் கண்டு அவரை நோக்கி 'உமக்குத் துயரம் உண்டானதற்குக் காரணம் யாது! என்றார். இளையாழ்வார் 'அந்தத் தொடர் இறைவன், சூரியனைக் கண்ட தாமரையைப் போலச் சிவந்த கண்களுடைய

வன் என்று பொருள் கூறுதற்கு உரியதாயி யிருக்கத் தாங்கள் அதற்குப் பொருத்தமற்ற பொருளைக் கூறக் கேட்டதனால் எனக்குத் துயரம் உண்டாயிற்று,' என்றார். யாதவப் பிரகாசர் அதனைக் கேட்டுச் சினம் கொண்டு, இளையாழ்வாரை நோக்கி, 'நான் சொன்னபடி கேட்பதாயின், என்பாற் படித்துக்கொண்டிரும். இன்றேல், இவ்விடத்தை விட்டுப்போம்' என்றார். இளையாழ்வார், மனம் கலங்கி ஒன்றும் கூறாமல் இருந்துவிட்டார்.

யாதவப் பிரகாசர் தம்முடைய மாணாக்கர்களுள், தமது கருத்துக்குச் சிறிதும் மாறுபாடின்றி நடப்பவர்களைத் தனியிடத்திற்கு அழைத்துச் சென்று, 'அன்புள்ள சீடர்களே! இளையாழ்வான், அடிக்கடி நமக்கு எதிர் தட்டாக நின்று, நம்மோடு வாதித்துக்கொண்டிருக்கின்றான். அவன் உயிருடன் இருந்தால், நம்முடைய அத்துவிதக் கொள்கை அருகிவிடும் அவன் முடிவுறுதற்கு உரிய வழி யாது என்றார். அம் மாணாக்கர்களும் தத்தம் கருத்தில் தோன்றிய வழிகளைக் கூறினர். அவர்கள் கூறியவை யாதவப் பிரகாசருக்குத் தகுதியானவையாகத் தோன்றவில்லை. அவர் அம்மாணவர்களை நோக்கி, 'நீங்கள் கூறிய வழிகள், உலகத்தில் நம்மைத் தப்பாமல் நிலையான பழிக்கு உள்ளாக்கிவிடும். நாம் உலகத்துப் பழிக்கு ஆட்படாமல் அவனை முடித்து விடுதற்கு உரிய வழி ஒன்று இப்போது என் மனத்தில் தோன்றியது. அது, காசியில் கங்கைக் கரையின் கண் உள்ள மணிகர்ணிகைக் கட்டத்தில் அவனுக்கு முடிவு உண்டாக்குவதேயாகும்' என்றார், சீடர்களும் 'இதுவே சரி' என்று அதற்கு உடன்பட்டார்கள். யாதவப்பிரகாசர் பிறகு இளையாழ்வாரை அழைத்து 'அன்புடையீர்! செங்கதிர் இல்லாதபோது தாமரை மலர்ந்து விளங்காதது போல, நீர் இல்லாத போது என் மனப்போது மலர்ந்து பொலிதல் இல்லை. ஆதலின் நீர் எப்போதும்போல் உமது படிப்பை இடையீடுபடாமல் மேற்கொள்வீர் என்று கூறினார். இளையாழ்வாரும் அங்ஙனமே படித்துவரலானார். நாள்கள்சென்றன.

ஒரு நாள் யாதவப்பிரகாசர் மாணாக்கர்கள் அனைவரையும் பார்த்து 'அன்பர்களே! உங்கள் துணைகொண்டு கங்கைக்குச் செல்ல விருப்பங்கொண்டேன்' என்றார். அம்மாணாக்கர்கள் அனைவரும் உடன்பாட்டைத் தெரிவித்தனர். பிறகு யாதவப் பிரகாசர் புறப்பாட்டுக்கு ஒருநாளைக் குறிப்பிட்டு எல்லா மாணாக்கர்களோடும் புறப்பட்டுச் செல்லலானார். இளையாழ்வாருடைய சிறிய தாயார் புதல்வர் கோவிந்த பட்டர் யாதவப் பிரகாசருடைய சொல்லைக் கடவாமல் நடந்து வந்தவர்களுள் ஒருவர். ஆயினும் யாதவப் பிரகாசருக்கு அவரிடத்தில் நம்பிக்கை இல்லை. அவர் இளையாழ்வாரும் கோவிந்தபட்டரும் தனி இடத்தில் ஒன்று கூடாமல் இருத்தற்கு உரிய வழிகளைச் செய்து வருவாராயினார்.

அனைவரும் விந்தியமலையின் அருகில் உள்ளதொரு காட்டை அடைந்தனர். அங்கு



இளையாழ்வார் சிறுநீரைக் கழித்தற்காக ஓர் இடத்தில் தங்கினார். உடனே கோவிந்த பட்டரும் தனியான இடத்தில் ஒன்று கூடாமல் சிறுநீர் கழிக்க வேறு இடம் செல்வாரைப் போலச் சென்று பிறர் அறியாதபடி இளையாழ்வார் அருகிற்போய் அவருக்கு யாதவப் பிரகாசர் கங்கைக்குச் செல்லக் கருதியதன் காரணத்தைக் கூறி 'நீர் இனி இங்கு இருத்தல் வேண்டா இவர்களை விட்டு அகன்று போய் விடும்' என்று கூறிவிட்டுத் தனியாகச் சென்று மற்ற மாணாக்கர்களோடு கூடிக் கொண்டார்.

இளையாழ்வார் அதனால் துயரம் உற்று யாதவப் பிரகாசரிடம் செல்லாமல் அவர் செல்லும் வழிக்கு எதிரான குறுக்கு வழியிற் செல்லலானார். அப்போது பரிதியினுடைய செவ்விய கதிர்கள் அவர் திருமேனியை வருத்தின. அவர் கால்களில் பாரகற்கள் தைத்தன. அவற்றால் அவர் கால்களினின்று குருதி பெருகியது. ஆதலின் அவர் நடக்க முடியாமல் ஒரு மரத்தின் கீழ்ப் போய் நின்று நாற்புறமும் சுற்றி நோக்கினார்; மரம் செடி கொடிகளையுடைய காடன்றி மனிதர்கள் எவரையும் காணவில்லை; அதனால் திகைத்துக் கலங்கி 'அந்தோ இக்காட்டில் வழிதிகைத்து அலமரும் எனக்கு துணை ஆவாரார்!' என்று எண்ணி ஏங்கினார். அடியவர்களுக்கு எளியனாகிய பெருமாள் திருமகள் வில்லிச்சியின் உருவம் கொண்டு தன்னுடைன் வரத் தான் வில்லியின் வடிவம் கொண்டு வாளும் வில்லும் கையில் ஏந்தி சென்று இளையாழ்வாருக்குமுன் நின்றான். இளையாழ்வார் அவர்களைக்கண்டு கலக்கம் தீர்ந்து உள்ளந்தேறி அவர்களுள் வில்லியை நோக்கி 'திண்டோள் வீரரே! நீங்கள் எங்கிருந்து வருகின்றீர்கள்! எங்குப் போகின்றீர்கள்!' என்று வினவினார். வில்லி 'அறிஞரே நாங்கள் வடநாட்டிலுள்ள சித்தாச்சிரமத்திலிருந்து வருகின்றோம். மெச்சுறு புலமையாளர் அகமகிழ்ந்து போற்றும் கச்சிப்பதிக்குப் போகின்றோம்' என்றான். இளையாழ்வார் 'அங்ஙனமாயின் நானும் உங்களோடு வர விரும்புகின்றேன்' என்றார். அவ்வில்லியும் 'நன்று எம்முடன் நீர் வருவீராக' என்றான்.



பிறகு அவ் இருவரும் முன்னே செல்ல இளையாழ்வார் அவர்கள் பின் சென்றார். வில்லி இளையாழ்வாரை நோக்கி 'அறிஞரே முன்னே எங்கள் குலமணியாய்த் தோன்றினவராகிய குகப் பெருமான் என்பார் சீதாப் பிராட்டியோடும் இலக்குமணனோடும்முன்னே காட்டுக்குச் சென்ற இராமன்பால் மிக்க அன்புடையவராய் அவ்இராமன் அவ் இருவருடன் கங்கையைக் கடந்து சித்திரகூடம் செல்லுதற்கு உரிய தொண்டுகளைப் புரிந்தார். இப்போது நான் உமக்குத் துணையாகும் பேறுபெற்றேன். உம்மை நோக்கினவுடன் உம்மிடத்தில் எனக்கு மிக்க அன்பு உண்டாயிற்று. உம்முடைய முகப் பொலிவு, அருள்மனச் செல்வராய் விளங்குவீர் என்பதனைக் காட்டுகின்றது' என இங்ஙனம் பல இன்மொழிகளைக் கூறிக் கொண்டே சென்றான். இளையாழ்வார் மனம், அவ்வில்லியின் இன்சொற்களில் ஆழ்ந்துவிட்டது. அதனால் அவருக்கு வழிநடத்தலின் வருத்தம் ஒருசிறிதும் தோன்றவில்லை. அவர்கள் விந்தியமலையைச் சார்ந்த காட்டைக் கடந்து பல காதம் வந்துவிட்டார்கள். அப்போது அவ்வில்லி இளையாழ்வாரை நோக்கி 'அறிஞரே வழிநடையினால் உம் அடிகள் சிவந்துவிட்டாற்போல வானம் சிவந்து விட்டது. இனி நாம் வழிநடத்தல் வேண்டா. இங்கு எங்கேனும் நாம் தங்கியிருத்தலே நன்று' என்றான். எங்கும் இருள் சூழ்ந்து விட்டது. ஆதலின் அம் மூவரும் ஓர் அரசமரத்தின் அடியில் தங்கினார்கள். நள்ளிரவு வில்லிச்சி வில்லியைப் பார்த்து 'அன்புடையீர் எனக்கு மிக்க தாகமாய் இருக்கின்றது எனக்குத் தண்ணீர் வேண்டும்' என்றாள். வில்லி 'பெண்ணே விடிந்தவுடன் நல்ல தண்ணீர் உள்ள கிணற்றினின்று நீர் கொண்டு வந்து தருகின்றேன்' என்றான். இளையாழ்வார் அதனைக் கேட்டு 'அந்தோ நமக்குப் பேருதவி புரிந்தவர்களாகிய இவர்களுக்கு நாம் உதவபுரிதற்கு இயலாதபடி இருள் சூழ்ந்திருக்கின்றதே' என்றெண்ணி மிகவும் மனம் வருந்தினார்.

பிறகு அவர் வழிநடந்த வருத்தத்தினால் துயின்று விட்டனர். கீழ்வானம் வெளுத்தது. ஆதலின் பறவைகள் தத்தம் கூடுகளினின்று வெளிச்செல்லுதற்காகக் 'கீச்சு கீச்சு' என்று கத்தின. இளையாழ்வார் துயில் உணர்ந்து தமக்குத் துணையாக வந்தவர்களை நோக்கினார்; அவர்களைக் காணவில்லை; அதனால் திகைத்து நாற்புறமும் சுற்றிப் பார்த்தார். அவர்கள் காணவில்லை. ஆதலின் 'ஒருகால் அவர்கள் முன்னே துயிலுணர்ந்து நம்மைத் துயிலினின்று எழுப்ப மனங்கொள்ளாமல் சென்று விட்டார்களோ! அன்றி நள்ளிரவில் அவ்வம்மை நீர் வேண்டினாள்: ஆதலின் அவ் இருவரும் நீர் உள்ள இடத்தைத் தேடிச் சென்றார்களோ! இதோ மக்கள் பலமுறை நடந்து சென்றதனால் ஆன வழி காணப்படுகின்றது. இவ்வழியில் சென்று பார்ப்போம்' என்று எண்ணி அவ்வழியாகச் சென்றார். கதிரவன் குணதிசை வந்தணைந்தான்; மக்கள் பலர் நடமாடலாயினர்; இளையாழ்வார் மக்கள் நடமாடுதலைக் கண்டு 'இஃதோர் ஊர்போலும் இங்கு நீர் இருக்கும் இடம் ஏதேனும் உள்ளதோ! பார்ப்போம்' என்று எண்ணி எதிரே நோக்கினார். நோக்கிச் சிறிது தொலைவில் ஒரு தோப்பு இருக்கக் கண்டு அதனை அணுகி அத்தோப்பில் ஒரு கிணறும் மாந்தர்கள் நாலைந்து பேரும் இருக்கக் கண்டு அம் மக்கள்பால் சென்று, 'அன்புடையீர் இஃது எந்த ஊர்?' என்றார். அவர்களுள் ஒருவர், 'என்ன அந்தணரே இதோ புண்ணியகோடி விமானம் தோன்றுகின்றதே இதனால் இது என்ன ஊர் என்பது தெரியாதோ! நாங்கள் உமக்கு வேறாகக் கூற வேண்டுமோ!' என்றார்கள்.

இளையாழ்வார், அதனைக் கேட்டவுடன் மிக்க வியப்பு எய்தி 'ஆ' நமக்குத் துணையாக வந்தவர்கள் வில்லியும் வில்லிச்சியும் அல்லர். அவர்கள் பேரருளாளனும் பெருந்தேவித்தாயாருமே. ஆர் துணையாவார்! என்று எண்ணியிருந்த நமக்கு அவர்கள் துணையாய் வந்தும் அருகில் இருந்தும் நாம் அவர்களை அறிந்து பணிந்து இன்புறும் பேற்றைப் பெறாமற் போனோமே! என்னே நம் வினைப் பயன்' என்று கூறி வருந்திக் கண்ணீர் பெருக்கி மூர்ச்சையடைந்தார்.

பின்பு தெளிந்து எழுந்து அரச வீதியிலே சென்று திருக்கோயிலை அடைந்து பேரருளாளனைச் சேவித்து 'எந்தையே நீயும் எம் அன்னையும் வில்லியும் வில்லிச்சியும் போல வடிவம் கொண்டு அடியேனுக்குத் துணையாக வந்து இன்னருள் புரிந்தீர். ஆயினும் அடியேன் உங்களை உண்மை உருவில் வணங்கி மகிழும் படியான பேற்றை அளிக்காமல் வஞ்சித்தீர்களே! இது உங்கள் பேரருளுக்குத் தக்கது ஆமோ?' என்று உரைத்து 'எம்பெருமானே நின் திருவுளப்படி செய்வன செய்க' என்று கூறிப் பலவாறு போற்றிப் பணிந்தார். பிறகு

அவர் வில்லிச்சியாக வந்த பெருந்தேவித் தாயார் முன் நாள் நள்ளிரவில் நீர்கேட்டதையும் வில்லியாக வந்த பேரருளாளன் அதைக் கேட்டுக் கூறியதையும் எண்ணி முன்கண்ட சாலைக் கிணற்று நீரை அன்று முதல் நாள் தோறும் முகந்து வந்து அவர்கள் திருமஞ்சனத்துக்குக் கொடுத்து வருவாராயினர்.

அவ் இடத்தில் யாதவப்பிரகாசர் நெடு நேரம் ஆகியும் இளையாழ்வார் வராமையினால், அவரைத் தேடும்படி கோவிந்தபட்டர் முதலிய மாணாக்கர்களை அனுப்பினார். கோவிந்தபட்டர் ஒன்றும் அறியாதவர் போல மற்றை மாணாக்கர்களோடு சென்றுதேடினார். மற்றை மாணாக்கர்கள் பல இடங்களிலும் சென்று தேடி இளையாழ்வார் எங்கும் காணப்படாமையால் திரும்பி வந்து, 'இளையாழ்வாரை எங்கும் காணவில்லை' என்று கூறினார்கள். கோவிந்தபட்டரும், மற்றை மாணாக்கர்கள் கூறியபடியே கூறினர். யாதவப் பிரகாசர், 'அந்தோ! இளையாழ்வாரைப் புலி முதலிய கொடியவிலங்குகள் கொன்று விட்டிருக்கும். அவன் அறிவிற் சிறந்தவன்; அன்பும் பணிவும் வாய்ந்தவன்; இன்சொல்லன்; கலை நிறைந்த நிலவு எனப்பொலியும் மலர் முகத்தான்; இக்கொடிய கானில் மாணிக்கமணியை இழந்து விட்டோமே. இத் துயரம் என்றும் நம் மனத்தை விட்டு அகலாது' என்று கூறிக் கண்ணீர் பெருக்கினார். அவருடன் வந்த மற்ற மாணாக்கர்கள் கண்களினின்றும் நீர் பெருகி வழிந்தது. யாதவப் பிரகாசர் கருத்தோடு மாறுபடாமல் நடப்பவர்களாகிய மாணாக்கர்கள், பிறகு அவரைத் தனி இடத்திற் கண்டார்கள். அவர் அவர்களை நோக்கி 'அன்பிற் சிறந்தவர்களே! நாம் எண்ணி வந்த செயல், நம் மீது சிறிதும் பழி சாருதற்கு இடம் இன்றித் தானே முடிந்து விட்டது; இனி நாம் குறித்தபடி கங்கைக்குச் சென்று நீராடிக் கச்சிப்பதிக்குத் திரும்பிவிடலாம்' என்றுரைத்தார்.

பின் அவர் மாணாக்கர்களோடு கங்கைக் கரைக்குச் சென்றார். நாள்தோறும் அம் மாணாக்கர்களோடும் கங்கையில் நீராடலானார். இங்ஙனம் கங்கையில் நீராடி வருகையில் ஒருநாள் கோவிந்தபட்டருடைய கையில் ஓர் இலிங்கம் வந்து சேர்ந்தது. கோவிந்தபட்டர் அதைக் கண்டு, மிக்க வியப்பெய்தி அதனை யாதவப் பிரகாசருக்குக் காட்டினார். யாதவப் பிரகாசர், கோவிந்த பட்டரை நோக்கி, 'நீர் தெய்வத்தன்மையை உடையவர்; ஆகையால் கங்கையில் நீராடியதன் பயன் தானே வந்து கை சேர்ந்தாற் போல் கங்காதரனே வந்து உம் கை புகுந்தான்' என்று கூறி அவர்பால் மிக்க அன்புடையவரானார். பிறகு எல்லோரும் அவருக்கு 'உள்ளங்கை கொணர்ந்த நாயனார்' என்று பெயரிட்டு, அப்பெயராலே அவரை அழைப்பாராயினர்.

பின்னர் யாதவப்பிரகாசர் கங்கை நீராடுதலை முடித்துக் கொண்டு, மாணாக்கர்களுடன்



திரும்பிக் கச்சிப்பதிக்குச் செல்லக் கருதிப் புறப்பட்டுச் சகந்நாதம், அகோபிலம் என்னும் பதிகளின் வழியாகத் திரும்பினார். அங்ஙனம் செல்கையில் உள்ளங்கை கொணர்ந்த நாயனார் யாதவப் பிரகாசரை நோக்கி 'எங்கள் அருமைக் குரவரே! நான் சென்று இந்த இலிங்கத்தைத் தக்கதோரிடத்தில் தாபித்து வருகிறேன்,' என்று கூறி, விடைபெற்றுக் கொண்டு சென்றார். யாதவப் பிரகாசர் திருக்கச்சிக்குச் செல்ல மற்றமாணாக்கருடன்புறப்படலானார்.

உள்ளங்கை கொணர்ந்த நாயனார் தம்முடைய பிறப்பிடமாகிய மழலைமங்கலத்திற்கு சென்று, பல பண்டிதர்களைக் கூட்டி, அவர்கள் முன்னே அவ் இலிங்கத்தைத் தக்கதோரிடத்தில் நிறுத்தி, அதன்பால் மிக்க பத்தி உடையவராய் வழிபட்டு வருவாராயினர். காளத்திநாதர், உள்ளங்கை கொணர்ந்த நாயனார் அன்பிற்கு உவந்துஒரு நாள் அவர் கனவில் தோன்றி 'அன்பனே நீ நம்முடைய காளத்திக்கு வருவாயாக' என்று கூறிக்காளத்தியில் உள்ள கோயில் மாந்தர்கள் கனவிலும் அன்று தோன்றி, 'அன்பர்களே நீங்கள் சென்று மழலைமங்கலத்திலிருக்கும் உள்ளங்கை கொணர்ந்த நாயனாரை இங்கு அழைத்து வாரும் என்று, கட்டளையிட்டார். அவ்வடியார்களும் அவ்வாறே மழலைமங்களம் என்னும் ஊரை அடைந்து, உள்ளங்கை கொணர்ந்த நாயனாரைப் பணிந்து அவருக்குக் காளத்திநாதருடைய கட்டளையைக் கூறிக் காளத்திக்கு அவரை அழைத்துக் கொண்டு சென்று, கோயில் நிருவாகத் தலைவருக்கு உரிய முத்திரை மோதிரத்தையும் அவருக்குக் கொடுத்து அவரைத் தங்கள் தலைவராகக் ஏற்றுக் கொண்டார்கள். அவரும், காளத்திநாதர் பால் பேரன்பு உடையவராய் அவருக்குத் தொண்டு புரிந்து வரலானார்.

—(தொடரும்)

# ஆதிசங்கரர் அருளிய மனிசாபஞ்சகம்

## திருமதி சந்தானலட்சுமி

காசி மாநகரத்தில் சங்கரர் வாழ்ந்து வந்தபோது ஓர் அற்புதம் நடந்தது. அது என்னவென்று பார்ப்போமா?

ஒரு நாள் சங்கரர் தம் சீடர்களுடன் கங்கையில் நீராடித் திரும்பி வந்து கொண்டிருந்தார். அப்போது புலையன் ஒருவன் எதிரே வந்துகொண்டிருந்தான். அவன் தொலைவில் வந்துகொண்டிருந்தபோதே நாற்றமடித்தது. அவன் தலையில் கட்குடம் ஒன்றிருந்தது. அதிலிருந்த புளித்த கள்ளின் நாற்றம் குமட்டலை ஏற்படுத்தியது. அந்தப் புலையன் தன் கைகளில் நான்கு நாய்களைக் கயிற்றால் பிணைத்து இழுத்து வந்துகொண்டிருந்தான்.

அதைச் சங்கரரும் அவருடைய மாணவர்களும் கண்டனர்; அருவருப்புக் கொண்டனர். அந்தப் புலையன் ஒதுங்கிச் சென்றுவிடுவான் என்று அவர்கள் நினைத்தனர். அவனோ ஒதுங்குவதாகத் தெரியவில்லை. பாதை நடுவில் வந்துகொண்டிருந்த அந்தப் புலையன் சங்கரர் மீதும் அவருடைய சீடர்கள் மீதும் மோதிவிடுவான் போலிருந்தது.

உடனே சங்கரர் அந்தப் புலையனை நோக்கி, 'அன்பனே! அப்பால் விலகிச் செல்' என்று கூறினார்.

அதைக்கேட்டதும் அந்தப் புலையன் விலகிச் சென்றானா! அதுதான் இல்லை. அவன் நின்றான்; சங்கரரை நோக்கிப் புன்முறுவல் செய்தான்.

சங்கரருக்கும் அவருடைய சீடர்களுக்கும் ஒன்றும் புரியவில்லை. அவர்கள் திகைத்துப் போய் நின்றார்கள்.

புலையன் சங்கரரைப் பார்த்து 'சுவாமி தாங்கள் அத்வைதம் ஓதும் ஆசாரியார் அல்லவா! தாங்கள் இத்தகைய வித்தியாசம் பாராட்டலாமா! என்னைப் புலையன் என்று கருதி விலகிப் போகச் சொல்கிறீர்கள். நல்லது. புலைமை வாய்ந்தது என் தேகமா? என் ஆன்மாவா? புலைமை என்பது தேகத்திற்குப் பொருந்துமா? ஆன்மாவுக்குப் பொருந்துமா? ஆராய்ந்து பார்த்தால் இந்தப் பேத பாவனை மன மயக்கத்தால் ஏற்பட்ட கற்பனை என்பது புலனாகும். மேலும் என்னை விலகிப் போகச் சொல்கிறீர்கள். எது எதிலிருந்து விலகிச் செல்ல வேண்டும்! அதை நீங்கள் சொல்லவில்லை. நானும் சோற்றாலான ஒருபிண்டம் தாங்களும் சோற்றாலான ஒரு பிண்டம். நீங்களாகிய சோற்றுப் பிண்டத்திலிருந்து நானாகிய சோற்றுப் பிண்டம் விலகிச் செல்ல வேண்டுமா என்று தத்துவம் பொதிந்த கேள்விகளை





**'பொருட்காட்சியில் நமது அரங்கத்திற்குக் கிடைத்த முதல் பரிசு, சிறப்புப் பரிசுக் கேடயங்களுடன் நம் அறநிலையத்துறை அதிகாரிகள் வீற்றிருக்கும் காட்சி**

ஒன்றன் மீது ஒன்றாகக் கேட்டுக்கொண்டேயிருந்தான்

புலையன் பேசியதைக் கேட்டுச் சங்கரர் அதிர்ச்சியடைந்தார். தமக்கு முன்னால் நின்று கேள்விக்கணைகளைத் தொடுத்துக் கொண்டிருந்தவன் சாதாரணப் புலையன் அல்லன் என்பதைச் சங்கரர் உணர்ந்தார்.

புலையனோ விடுவதாக இல்லை. அவன் மேன்மேலுந்தத்துவம் பொதித்த பொருள் நிறைந்த வினாக்களை வீசிக்கொண்டேயிருந்தான்.

சங்கரர் சிறிது நேரம் தம்முடைய கண்களை மூடி யோசித்தார்; புலையனின் கேள்விகளில் உண்மை பொதிந்திருந்ததை அறிந்தார். 'ஒருவனை அவன் பிறந்த குலத்தைக் கொண்டு மதிக்கக்கூடாது. ஞானத்தைக் கொண்டே அவனை மதிக்க வேண்டும்' என்பதைச் சங்கரர் உணர்ந்தார்.

அது பட்டப்பகல் என்பதைச் சங்கரர் பொருட்படுத்தவில்லை; பலர் அங்கே கூடியிருந்ததைப் பார்த்து வெட்கப்படவில்லை. சங்கரர் தமக்கு முன்னால் நின்றுகொண்டிருந்த புலையனைத் தம்முடைய ஞானகுருவாக நினைத்தார்; அவன் காலில் விழுந்து வணங்கினார்

அதைக் கண்டு அங்கிருந்தோர் அனைவரும் வியந்தனர்

அடுத்த கணமே சங்கரர் 'மனீஷாபஞ்சகம்' என்று ஐந்து சுலோகங்களை இயற்றினார். அவைஐந்தும் அற்புதமானவை; அரிய கருத்துகள் பொதிந்தவை. அவை ஒவ்வொன்றன் இறுதியிலும் 'உலகத் தோற்றங்கள் அனைத்தையும் ஒரே ஆன்ம வடிவமாக நோக்குபவன் உயர்ந்தவன். எந்தக் குணத்தைச் சேர்ந்தவனானாலும் அவனே என் குரு. இதுவே என் கொள்கை' என்று கூறி முடித்திருந்தார்.

சங்கரர் 'மனீஷாபஞ்சக'த்தை இயற்றி முடித்தாரோ இல்லையோ அங்கே ஓர் அற்புதம் நிகழ்ந்தது.

சங்கரருக்கு முன்னால் நின்றுகொண்டு வாதம் செய்த புலையன் மறைந்தான். அந்த இடத்தில் காசி விசுவநாதர் காட்சியளித்தார். புலையன் தலையில் கட்குடமாகவிருந்ததோ விசுவநாதர் முடியில் கங்கையாகக் காட்சியளித்தது. புலையன் கைகளில் பிடித்திருந்தானே நான்கு நாய்கள். அவை நான்கும் நான்கு வேத புருடர்களாகத் தோற்றமளித்தன. ஆம்! சங்கரராகிய சிவபெருமானைச் சோதிக்க விசுவநாதராகிய சிவபெருமான் புலையன் வேடந்தாங்கி வந்திருந்தார்; தெருவிலே திருவிளையாடல் நடத்தி அனைவரையும் பெரு மகிழ்ச்சியிலாழ்த்தினார்.

விசுவநாதரைக் கண்டதும்சங்கரர் அளவிலா ஆனந்தம் அடைந்தார்; விசுவநாதரைப் போற்றித் துதித்தார். அப்போது விசுவநாதர் சங்கரரை நோக்கி 'சங்கரா! என் அமிசமான நீ இவ்வாறு அந்தணன் என்றும் புலையன் என்றும் வித்தியாசம் பாராட்டுதல் நியாயமாகுமா! வியாசர் இயற்றிய பிரம்மசூத்திரங்களுக்குப் பலர் விபரீதமான அர்த்தங்களைக் கற்பித்து வழங்குகின்றனர். அவை மெய்யானவை அல்ல என்பதை நீ உலகுக்கு உணர்த்த வேண்டும். அதனால், வியாசருடைய பிரம்மசூத்திரங்களுக்கு நீ விரைவில் உரையெழுத வேண்டும்' என்று கூறி மறைந்தார்.


வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை. சென்னை-600 034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் ந. அமிர்தலிங்கம், எம்.ஏ. பிஎச்.டி.
அச்சிட்டோர் : தமிழரசு அச்சகம். அரசினர் தோட்டம். சென்னை-600002.



சென்னை அருள்மிகு சென்னகேசவப்பெருமாள் ஆலயத் திருக்குடநீர் தெளிப்பு விழா 16-6-97 அன்று மிகச் சிறப்பாக நடை பெற்றது. இவ்விழாவில் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாட்டுத் துறை மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் தமிழ்க்குடிமகன் அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு கே. தர்மராஜன் இ.ஆ.ப., அறநிலையத் துறை ஆணையாளர் திருமிகு ச. மெய்கண்டதேவன் இ.ஆ.ப., ஆலயப் பரம்பரை அறங்காவலர் திருமிகு மணலி இராம கிருட்டிணன் ஆகியோர் முன்னிலையில் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.



மயிலை அருள்மிகு கபாலீசுவரர் ஆலயத்தில் சாதி சமய ஒருமைப்பாட்டினை வலியுறுத்தி 3-7-97 அன்று நடைபெற்ற சிறப்பு வழிபாடு மற்றும் பொது விருந்து விழாவில் மாண்புமிகு தமிழக முதல்வர் முத்தமிழ் அறிஞர் டாக்டர் கலைஞர் அவர்கள் கலந்து கொண்டு உணவு பரிமாறுகின்றார்கள்.